Pubished with the financial assistance from the Ministry of Education, Government of India.

ஹிதபாஷிணீ வெளியீடு நெ. - 3.

# सप्तर्षिरामायणम्

## अन्यानि रामचन्द्रस्तोत्राणि च

---

# ஸப்தர்ஷிராமாயணம்

மற்றும்

பல

ராமசந்த்ர ஸ்தோத்ரங்கள்



தமிழ் உரையுடன்

பிரசுரித்தவர் :—

R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,

1835/3 மேலவீதி,

தஞ்சாவூர்.

 1967 [ விலை 70 பை.

Published with the financial assistance from the Ministry of Education, Government of India.

ஹிதபாஷிணீ வெளியீடு நெ. - 3.

# सप्तर्षिरामायणम्

## अन्यानि रामचन्द्रस्तोत्राणि च

---

# ஸப்தர்ஷிராமாயணம்

மற்றும்

பல

## ராமசந்த்ர ஸ்தோத்ரங்கள்



தமிழ் உரையுடன்

பிரசுரித்தவர் :—

R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,

1835/3 மேலவீதி,

தஞ்சாவூர்.



1967

[ விலை 70 பை.

# பொருளடக்கம்



---

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 22 | 24 | सुस्वसिन्धु | सुग्वसिन्धु |
| 42 | 8 | थ्रिता | श्रिता |
| 44 | 24 | गात्रषु | गात्रेषु |
| 51 | 7 | पावनँ | पावनं |
| 57 | 15 | भक्तिसाक् | भक्तिभाक् |
| 57 | 19 | ப$^{4}$க்தி | ப$^{4}$ாக் |
| 58 | 13 | स्फुरीकृत | स्फुटीकृत |
| 61 | 17 | ररिाघवसमर्पिजपरम्भ | राघवसमर्पितपरिरम्भ |

# PREFACE.

"Brahman is One" our sastras declare and continue that as and when necessity arises and there is intense hankering in millions of minds for divine interference, formless Brahman, out of Its own volition of Ananda and Grace, takes form and appears among men in various Avatars to redress their grievances and give them an ideal to live for. Among the several incarnations of Bhagawan, Sri Rama, the hero of the Epic "Ramayana" is easily the most beloved of all mortals for many reasons. For one, in his trials and tribulations, he represents the woes and anxieties of the average human being in his day-to-day affairs of life, and at the same time he rises up to the highest ideals of human living; he is thus not only a typical man, but also all things that an ideal man should be - he is Bhaghawan Sri Ramachandra. For another, his graciousness is such that even towards his enemies, provided they surrender entirely unto him, he extends his benediction and protection. Sri Ramachandra says.

सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ।
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद् व्रतं मम ।।

Further, without distinction of caste, colour or kind, at various times in his career he has extended his powerful protection to a crow (Kakasura), an eagle (Jatayu), an archer (Guha), a monkey (Sugreeva) and a Rakshasa (Vibheeshana).

It is, therefore, that for thousands of years, millions of Hindus have offered their prayers and adorations to Sri Ramachandra, and have benefitted by his grace in obtaining worldly wealth and prosperity, in getting rid of their woes and afflictions, and in obtaining peace of mind,

An effort has been made in this volume to make a selection of such prayers and incantations, adorations and supplications, in the form of Sanskrit slokas (together with their Tamil rendering) culled from different sources. Some of them are highly poetical and imaginative, some of them describe the various adventures and sing the glories and ideal qualities of Sri Rama; but care in selection has been taken to so see that all of them are in fairly simple, and easy-flowing metres, that facilitate learning by heart for daily prayers.

**I. Sapta Rishi Ramayanam.**

Srimad Valmiki Ramayanam consists of seven Kandas, or Sections. Everyone of the Saptarishis, the Seven famous Rishis has, each of them, written one sloka giving the essence of each Kanda – thus, there are seven sloka for seven Rishis for seven Kandas of the Ramayana, and in the eighth sloka is given the benefits accruing from studying them, thus.

" Whoever reads these slokas, or hears them read, all their loads of sins will disappear. They will have all worldly wealth and prosperity, with many sons and grandsons, and after enjoying all the happiness that this world can offer, they will reach the abode of Sri Vishnu, namely, Vaikunta."

Let us, therefore, hope that everyone will not only himself read the " Sapta Rishi Ramayana " daily, but will train their children also to do likewise, and obtain all benefits, both of this world and the next.

**2. Sri Sita Rama Stotram.**

The author of these adorations are said to be Sri Anjaneya. In the whole of the Ramayana, Sri Anjaneya is the only one who is dignified by the title of " Vidwan ",

the learned one, Kavi Chakravarty Kamban also calls him "Sollin Selvan", the lord of the words. So learned was he reputed.

In the first eight stanzas, the first portion is praise of Sri Ramachandra, and the latter of Sri Sita. In the ninth sloka, he says that he is blessed because he has been able to adore Sri Rama and Sita. 10, 11, and 12th slokas are "Phalasruthi".

### 3. Sri Ramachandra Stuti.

This is a collection of slokas taken from the writings of such famous Sri Rama baktas, such as Sri Adi Sankara Bahagavatpadacharya's "Rama Bhujanga Stotram", Sri Ramabhadra Dikshitar's "Ramashtaprasam", and Sri Neelakanta Dikshitar's "Raghuvira Sthavam". Tamil translations are added, and as the text is in easy-flowing metre and rhyme, it should be easy to learn by heart.

### 4. Hanumath Pancha Ratnam.

This poem consists of five Slokas is praise of Sri Hanuman, and has been written by Sri Sankara Bhagavad-padacharya. It is said that those who study this poem and include this in their daily prayers will gain all desires and wealth in this world and will shine as great Rama bhaktas.

### 5. Hanumath Dhandakam

Sundara Kandam of Ramayana is considered the most beautiful, "Sundara", because in this one Kanda all the essentials of a great epic are seen in their full majesty great deeds, great language and great thoughts. Scholers give many other reasons why this Kanda is called "Sundara". But, it is undeniable and noteworthy that throughout the ages, millions of people include this Kanda in their daily parayana in the firm belief that doing so will bring them untold prosperity and happiness and solace.

Many will confirm in their own experience that this is a matter of fact. One of the important reasons for the popularity of this Kanda is that it describes in great detail the mental development and achievements of that greatest of bhaktas, Sri Hanuman. In this "Dandakam" intended for daily adoration, the glories of Sri Hanuman is narrated in a brief, but attractive, form.

Although the author of "Hanumath Dandakam" is unknown, the diction and thoughts expressed are so noble that it requires no apology to include this poem in this series.

Although the poems and songs included in this book might have severally appeared in various publications, we believe that it is for the first time that they are all brought together in one volume to gladden the hearts of all Rama bhaktas. Some years ago, a portion only was published by us. but in this edition, more worthwhile additions have been made and it is hoped that all asthikas will derive great benefit from same.

Lastly, our special thanks are due to the Sarada Vilasa Press, Kumbakonam, for printing this edition, and to the Education Department of the Government of India for the financial assistance rendered by them for this noble cause.

R. MUTHUKRISHNA SASTRI,
*Editor & Publisher.*

# முகவுரை

இவ்வுலகில் ஸ்ரீமத் ராமாயணத்தையும், ஸ்ரீமத் ராமசந்திர மூர்த்தியையும் தழுவி பெரும்பாலும் எல்லா கவிகளும் எழுதி இருக்கின்றனர் என்று கூறலாம். அதற்குக் காரணம் ஸ்ரீராமாவதாரத்தின் தனிச் சிறப்பேயாகும். கடவுள் ஒருவர் தான் என்றாலும் அவர் பலவுருவங்களுடன் தோன்றி பலவித மனப்பான்மையுள்ளவர்களுக்கும் அருள்புரிந்து வருகின்றார் என்பது சாஸ்திரங்களின் முடிவு. இவ்விதம் தோன்றிய உருவங்களுள் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியின் பெருமை மிக அதிகம். விரோதியாயிருப்பினும் "தங்களைத் தவிர வேறு கதியில்லை" என்று பூர்ணமாக நம்பி அவரைச் சரணமடைந் தவர்களுக்கு பயங்கள் எல்லாம் நீங்கும். பயன்கள் எல்லாம் கிட்டும்.

सकृदेव प्रपन्नाय तवास्मीति च याचते ।
अभयं सर्वभूतेभ्यो ददाम्येतद् व्रतं मम ॥

என்பது ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் திருவாக்கு.

மேலும் ஜாதியையோ, குணங்களையோ குறைகளையோ எதையும் ஆலோசிக்காமல் அருள்புரியும் மூர்த்தி ஸ்ரீராம சந்திரன்.

काकाय कङ्काय च योदितेष्टं दाशाय कीशाय च राक्षसाय ।

காக்கை (காகாஸுரன்) கழுகு (ஜடாயு) வேடன் (குஹன்) குரங்கு (ஸுக்ரீவன்) இராக்ஷஸன் (விபீஷணன்) இவர்களுக் கெல்லாம் அருள் புரிந்திருக்கிறார்.

இவ்விதம் ஸர்வஸுலபராயும், ஸர்வோத்கிருஷ்டராயு முள்ள ஸ்ரீ ராமசந்திரமூர்த்தியை அனைவரும் ஸ்தோத்ரம் செய்து அவர் அருளைப் பெறுவதற்கென சில அரிய ஸம்ஸ் கிருத சுலோகங்கள் தமிழ் மொழி பெயர்ப்புடன் இதில் பிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றன. இவையெல்லாம் எளிய நடையில் சுலபமாக மனப்பாடம் செய்யக்கூடியவைகளாக அமைந்திருப்பதுடன் ஸ்ரீராமசந்திரமூர்த்தியின் பல குணங் களையும் ரஸமாக எடுத்துரைக்கின்றன.

## 1. ஸப்தரிஷி ராமாயணம்

ஸ்ரீமத் வால்மீகி ராமாயணம் ஏழு காண்டங்கள் கொண்டது. அந்த ஏழு காண்டங்களின் கருத்தை ஸப்த ரிஷிகளுள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு அழகிய சுலோகத்தால் வர்ணித்து விட்டு, கடைசியில் எல்லோரும் சேர்ந்து இதைப் படிப்பதால் உண்டாகும் பயன்களைப்பற்றி அடியிற்கண்டவாறு கூறியிருக்கின்றனர்.

" இந்த இனிமையான சுலோகங்களை எவர் படிக்கின்றனரோ, அல்லது கேட்கின்றனரோ அவர்களுடைய பாவக் குவியல்கள் பறக்கும். ஸர்வ ஐச்வர்யங்களுடனும் பல புத்திர பௌத்திரர்களுடனும் இவ்வுலகில் வெகுகாலம் வரை பலவித ஸௌகபோகங்களை அநுபவித்து இறுதியில் தேவர்களால் எப்பொழுதும் போற்றப்படும் ஸ்ரீவிஷ்ணுவின் ஸ்தானமாகிய வைகுண்டத்தை அடைவார்கள்."

சுருக்கமாக ஸ்ரீமத்ராமாயணார்த்தத்தை அறிந்துகொள்ளவும், ராமாயண படனத்தால் பெறக்கூடிய பல பயன்களை எளிதில் அடையவும் இந்நூல் மிக்க உபயோகப்படும். அனைவரும் இதை மனப்பாடம் செய்வதுடன் தம்தம் சிறுவர்களுக்கும் சிறுமிகளுக்கும் மனப்பாடம் செய்வித்துப் பூர்ண பயனைப் பெறவேண்டும் என்பது நமது கோரிக்கை.

## 2. ஸீதாராம ஸ்தோத்ரம்

இது பக்த ஆஞ்ஜநேயரால் இயற்றப்பட்டது. ஸ்ரீமத் வால்மீகி ராமாயணத்தில் "வித்வான்" என்று ஆஞ்ஜநேயர் ஒருவர்தான் போற்றப்பட்டிருக்கிறார். கவிச் சக்ரவர்த்தி கம்பரும் " சொல்லின் செல்வன் " என அவரைக் கொண்டாடுகிறார். அவர் அருளிச் செய்த சுலோகங்களின் பெருமைகளைப் பற்றி சொல்லவும் வேண்டுமோ ?

இந்த சுலோகங்களில் 1 முதல் 8 வரை முதற் பாகத்தால் ஸ்ரீராமனையும் இரண்டாம் பாகத்தால் ஸீதையையும் மிக இனிமையாக வர்ணித்திருக்கின்றார். 9-வது சுலோகத்தில்

"இவரை வணங்கி கிருதார்த்தனுக ஆகின்றேன்" எனக் கூறுகின்றுர். 10, 11, 12-வது சுலோகங்கள் பலச்ருதியாக அமைந்திருக்கின்றன.

## 3. ஸ்ரீராமசந்த்ர ஸ்துதி

ஆதி சங்கரர் அருளிச்செய்த "ராமபுஜங்கஸ்தோத்ரம்" ஸ்ரீ ராமபத்ர தீக்ஷிதர் அருளிச் செய்த "ராமாஷ்ட ப்ராஸனம்" ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர் அவர்களின் "ரகுவீர ஸ்தவம்" மற்றும் பல ராமபக்தர்களுடைய நூல்களிலிருந்தும் பல அரிய சுலோகங்கள் உரையுடன் பிரசுரம் செய்யப்பட்டிருக்கின்றன. ஸ்ரீ ராமபிரானது அனந்த கல்யாண குணங்களை அநுஸந்தானம் செய்ய இவை மிக்க பயன்படும். பல ப்ராஸங்களுடன் கூடியிருப்பதால் கேட்பதற்கும் இவை மிக இனிமையானவை.

## 4. ஹநூமத் பஞ்சரத்னம்

இது ஸ்ரீஆதிசங்கர பகவத் பாதாசார்ய ஸ்வாமிகளவர்களால் அருளிச் செய்யப்பட்டது. ஹநூமானைப்பற்றிய ஐந்து சிறந்த சுலோகங்கள் இதில் அடங்கி இருப்பதால் இதற்கு "ஹநூமத் பஞ்சரத்னம்" என்று பெயர். இதைப் படிக்கின்றவர்கள் இவ்வுலகில் வெகுநாள்வரை ஸமஸ்த போகங்களையும் அநுபவிப்பார்கள், சிறந்த ராமபக்தர்களாகவும் விளங்குவார்கள் என வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

## 5. ஹநூமத் தண்டகம்

இதில் ஆஞ்சநேயருடைய மஹிமை மிக அழகாக வர்ணிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீமத் ராமாயணத்தில் எல்லா காண்டங்களும் மிக ரஸமாக அமைந்திருந்தாலும் சுந்தரகாண்டத்திற்கு தனிச்சிறப்பு இருப்பதால் அதற்கு "சுந்தரம்" எனப் பெயர் ஏற்பட்டிருக்கிறது எனக் கருதுவோரும் உண்டு. வேறு காரணங்களாலும் அதற்கு "சுந்தரம்" எனப் பெயர் ஏற்பட்டிருக்கலாம். எப்படியிருப்பினும் அந்த காண்டம் ஸ்ரீராம பக்தர்களால் அதிகமாகப் பாராயணம் செய்யப்பட்டு வருகிறது. பலர் பலவித மனோரதங்கள் பூர்த்தியாவதன்

பொருட்டு பல முறையில் அதை பக்தி சிரத்தையுடன் பாராயணம் செய்து பயன்களையும் பெற்று வருகின்றனர் என்பது கண்கூடு. அதன் பெருமைக்குக் காரணம் அதில் ஸ்ரீ ராமபக்தரான ஆஞ்ஜநேயரது மஹிமை முக்கியமாக வர்ணிக்கப்பட்டிருப்பதும் ஒன்ருகும். அந்த மஹிமையை சுருக்கமாகவும் ரஸமாகவும் எடுத்துரைக்கிறது இந்த "தண்டகம்". இதை மனப்பாடம் செய்து பிரதிதினம் பாராயணம் செய்துவந்தால் ஸ்ரீ ஆஞ்ஜநேயருடைய அருள் நிச்சயமாகக்கிட்டும்.

இதை இயற்றியது யார் என்பது புலப்படாதபோனுலும் சொற்சுவை, பொருட்சுவை முதலியவற்றுடன் ஸ்ரீ ஆஞ்ஜநேய ப்ரபாவத்தை எடுத்துரைக்கின்றபடியால் இதையும் தமிழ் உரையுடன் இங்கு பிரசுரம் செய்துள்ளோம்.

இச்சிறு நூலில் உள்ள பல ஸ்தோத்திரங்கள் ஆங்காங்கு மற்றும் பல பகுதிகளுடன் பிரசுரம் செய்யப்பட்டிருந்தபோதிலும் ஸ்ரீராமகுணுநுபவத்திற்குரிய ஸ்தோத்ரங்களை மட்டும் பொருக்கி எடுத்து தமிழ் உரையுடன் வெளியிட்டால் அது ஸ்ரீ ராமபக்தர்களுக்கு மிக்க பயன்படும் எனக் கருதி இதை பிரசுரம் செய்திருக்கிரேும்.

சில ஆண்டுகளுக்குமுன் இதில் ஒரு பகுதியைமட்டும் வெளியிட்டிருந்தோம். அதற்கு பக்தர்களுடைய ஆதரவு அதிகமாக இருந்ததால் இன்னும் பல பகுதிகளைச் சேர்த்து பல சிறந்த மாறுதல்களுடன் இதை வெளியிட்டிருக்கிரேும். இதற்கும் ஆஸ்திகர்களது ஆதரவு பூர்ணமாக இருக்குமென்றே நமது நம்பிக்கை

இதை நேர்த்தியாக அச்சிட்டுக்கொடுத்த கும்பகோணம் "சாரதா விலாஸ பிரஸ்" உரிமையாளருக்கும், இதை அச்சிடப் பொருளுதவி செய்துவரும் மத்திய அரசாங்க கல்வி அமைச்சகத்திற்கும் நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிரேும்.

**R. முத்துகிருஷ்ண சாஸ்திரி,**
பதிப்பாசிரியர்.

# सप्तर्षिरामायणम् ॥

# ஸப்தர்ஷிராமாயணம்

कश्यपः — கச்யபர் :—

जातः श्रीरघुनायको दशरथान्मुन्याश्रयात्ताटकां
हत्वा रक्षितकौशिकक्रतुवरः कृत्वाप्यहल्यां शुभाम् ।
भङ्क्त्वा रुद्रशरासनं जनकजां पाणौ गृहीत्वा ततो
जित्वार्धात्मनि भार्गवं पुनरगात् सीतासमेतः पुरीम् ॥ 1

ஜாத: ஶ்ரீரகு[4]நாயகோ த[3]ச[1]ரத[2]ாந்
முந்யாச்[1]ரயாத்தாடகாம்
ஹத்வா ரக்ஷிதகௌசிகக்ருதுவர:
க்ருத்வாப்யஹல்யாம் சு[1]ப[4]ாம் ।
பங்க்த்வா ருத்[3]ரச்[1]ராஸநம்
ஜநகஜாம் பாணௌ க்[3]ருஹீத்வா ததோ
ஜித்வார்த்[3]த[4]ாத்மநி ப[4]ார்க[3]வம்
புநரக[3]ாத் ஸீதாஸமேத: புரீம் ॥ 1

தசரதனுக்குப் பிள்ளையாகத் தோன்றிய ஶ்ரீராமன், விச்வாமித்ரருடன், அவருடைய யாக ரக்ஷணத்திற்காகச் செல்லுகையில் தாடகை என்ற இராட்சஸியைக் கொன்று விச்வாமித்ரரின் சிறந்த யாகத்தைக் காப்பாற்றி (பின்பு மிதிலைக்குச் செல்லுகையில்) அகல்யை என்ற கௌதமருடைய பார்யையை தனது பாத தூளியால் பரிசுத்தையாகச் செய்து, ஜனகனால் இரக்ஷிக்கப்பட்டு வந்த பரமேச்வரனது வில்லை முறித்து, சீதையை மணந்துகொண்டு, திரும்பி அயோத்திக்கு வருகையில் நடுவழியில் பரசுராமனை ஜயித்து சீதையுடன்கூடம்றுபடியும் அயோத்தி நகரத்திற்குச் சென்றார். (1)

अत्रिः — அத்ரி :—

दास्या मन्थरया दयारहितया दुर्भेदिता कैकयी
श्रीरामप्रथमाभिषेकसमये माताप्ययाचद्वरौ ।
भर्तारं, भरतः प्रशास्तु धरणीं रामो वनं गच्छता-
दित्याकर्ण्य सचोत्तरं न हि ददौ दुःखेन मूर्च्छां गतः ॥ 2

த3ாஸ்யா மந்த2ரயா த3யாரஹிதயா
துர்3பே4தி3தா கைகேயீ
ஸ்ரீராமப்ரத2மாபி4ஷேகஸமயே
மாதாப்யயாசத்3வரௌ ।
ப4ர்தாரம், ப4ரத: ப்ரச1ாஸ்து
த4ரணீம் ராமோ வநம் க3ச்ச2தா
தி3த்யாகர்ண்ய ஸசோத்தரம்
நஹி த3தௌ3 து3:கே2ந மூர்ச2ாம் க3த: ॥

ஸ்ரீராமனுக்கு முதல்முதலாக யௌவராஜ்ய பட்டாபிஷேகம் செய்ய முயற்சித்தகாலத்தில் தயையற்ற மந்தரை என்ற தாஸியினால் செய்யப்பட்ட துர்போதனைகளால் மனமாற்றமடைந்த கைகேயி என்ற பிரியமான தாய்கூட அவள் கணவனை தசரதரிடம் "பரதன் பூமியை ஆளவேண்டும், இராமன் காட்டிற்குச் செல்லவேண்டும்" என்று இருவரன்களை யாசித்தாள். அதைக்கேட்ட தசரதர் எவ்வித பதிலையும் சொல்லவில்லை. தாங்கமுடியாத துக்கத்தால் மூர்ச்சையை அடைந்தார். (2)

भरद्वाजः — பரத்வாஜர் :—

श्रीरामः पितृशासनाद्वनमगात् सौमित्रिसीतान्वितो
गङ्गां प्राप्य जटां निबद्ध्य सगुहः सच्चित्रकूटे वसन् ।
कृत्वा तत्र पितृक्रियां सभरतो दत्वाऽभयं दण्डके
प्राप्यागस्त्यमुनीश्वरं तदुदितं धृत्वा धनुश्चाक्षयम् ॥ ३

ஸ்ரீராம: பித்ருச1ாஸநாத்3வநமக3ாத்
ஸௌமித்ரிஸீதாந்விதோ
க3ங்க3ாம் ப்ராப்ய ஜடாம் நிப3த்3த்4ய
ஸகு3ஹ: ஸச்சித்ரகூடே வஸந் ।
க்ருத்வா தத்ர பித்ருக்ரியாம்
ஸப4ரதோ த3த்வாப4யம் த3ண்ட3கே
ப்ராப்யாக3ஸ்த்யமுநீச்வரம்
தது3தி3தம் த்4ருத்வா த4நு: சாக்ஷயம் ॥ 3

ஸ்ரீராமர் தகப்பனருடைய கட்டளையினுல் சீதை, இலக்ஷ்மணன் இவர்களுடன் காட்டை அடைந்தார். அங்கு கங்கையை அடைந்து குஹனுடன் சேர்ந்து அவனுக்கெதிரிலேயே ஜடை தரித்துக்கொண்டு, பிறகு அங்கிருந்து சென்று அழகிய சித்ரகூட பர்வதத்தில் வசித்துக்கொண்டிருக்கையில் (அங்கு அவரை திருப்பி அழைத்துவர வேண்டுமென்ற எண்ணத்துடன் பரதன் வர, அவன்மூலம் தசரதன் மரணத்தைக்கேட்டு) பரதனுடன்கூட அவ்விடத்திலேயே தர்ப்பணம் முதலிய பித்ருகார்யங்களைச் செய்துவிட்டு, பிறகு அங்கிருந்து தண்டகாரண்யம் சென்று அங்குள்ள மஹரிஷிகளுக்கு அபயமளித்து, பிறகு அகஸ்திய முனிவரையடைந்து அவரால் உரைக்கப்பட்ட நன்மொழிகளையும் அழிவற்ற வில்லையும் பெற்றுக்கொண்டு. (3)

विश्वामित्रः — விச்வாமித்ரர் :—

गत्वा पञ्चवटीमगस्त्यवचनाद्दत्वाऽभयं मौनिनां
छित्वा शूर्पणखाऽस्यकर्णयुगलं त्रातुं समस्तान् मुनीन् ।
हत्वा तं च खरं सुवर्णहरिणं भित्वा तथा वालिनं
तारारत्नमवैरिराज्यमकरोत् सर्वं च सुग्रीवसात् ॥ 4

க3த்வா பஞ்சவடீமக3ஸ்த்யவசநாத்3
த3த்வா ऽப4யம் மௌநிநாம்
சி2த்வா சூ1ர்பணக2ாஸ்யகர்ணயுக3லம்
த்ராதும் ஸமஸ்தாந் முநீந்।
ஹத்வா தம் ச க2ரம் ஸுவர்ணஹரிணம்
பி4த்வா தத2ா வாலிநம்
தாராரத்நமவைரிராஜ்யமகரோத்
ஸர்வம் ச ஸுக்ரீவஸாத் ॥ 4

அகஸ்தியர் கூறியபடி அங்கிருந்து பஞ்சவடிக்குச் சென்று அங்குள்ள மகரிஷிகளுக்கு அபயமளித்து சூர்ப்பணகை என்ற இராக்ஷஸியின் மூக்கையும், இரு காதுகளையும் அறுத்து, எவ்லா முனிவர்களையும் இரக்ஷிப்பதற்காக கரன் என்ற இராக்ஷஸனைக் கொன்று, பொன் மானை (மாரீசனை) பிளந்து, வாலியை வதம் செய்து, தாரையையும் மற்ற ராஜ்யத்தையும் ஸுக்ரீவனுக்குச் சொந்தமாகச் செய்தார். (4)

गौतमः — கௌதமர் :—

दूतो दाशरथेः सलीलमुदधिं तीर्त्वा हनूमान् महान्
दृष्ट्वाऽशोकवने स्थितां जनकजां दत्वाऽङ्गुलेर्मुद्रिकाम् ।
अक्षादीनसुरान् निहत्य महतीं लङ्कां च दग्ध्वा पुनः
श्रीरामं च समेत्य देव जननी दृष्टा मयेत्यब्रवीत् ॥ 5

தூ3தோ த3ாச1ரதே2: ஸலீலமுத3தி4ம்
தீர்த்வா ஹநூமாந் மஹாந்
த்3ருஷ்ட்வாऽசே1ாகவநே ஸ்தி2தாம்
ஜநகஜாம் த3த்வாங்கு3லேர் முத்3ரிகாம்।

அக்ஷாதீ$^3$நஸுராந்நிஹத்ய மஹதீம்
லங்காம் ச த$^3$க்$^3$த்$^4$வா புந:
ஸ்ரீராமம் ச ஸமேத்ய தே$^3$வ ஜநநீ
த்$^3$ருஷ்டா மயேத்யப்$^3$ரவீத் ॥ 5

ஸ்ரீ ராமருடைய சிறந்த தூதனை ஹனுமாந் ஸமுத்ரத்தை அநாயாஸமாகத் தாண்டி, இலங்கைக்குச் சென்று, அங்கு அசோகவநத்தில் வீற்றிருந்த சீதையைக் கண்டு, அவளிடம் மோதிரத்தைக் கொடுத்து, அக்ஷன் முதலிய இராக்ஷஸர்களைக் கொன்று, விசாலமான இலங்கையையும் கொளுத்தி, மறுபடியும் ஸ்ரீராமனிடம் வந்து சேர்ந்து "ஏ ராம! ஜகந்மாதாவான ஸீதை என்னால் பார்க்கப் பட்டாள்" எனக்கூறினர். (5)

जमदग्निः — ஜமதக்நி :—

रामो बद्धपयोनिधिः कपिवरैर्वीरैर्नलाद्यैर्वृतो
लङ्कां प्राप्य सकुम्भकर्णतनुजं हत्वा रणे रावणम् ।
तस्यां न्यस्य बिभीषणं पुनरसौ सीतापतिः पुष्पका-
रूढः सन् पुरमागतः सभरतः सिंहासनस्थो बभौ ॥ 6

ராமோ ப$^3$த்$^3$த$^4$பயோநிதி$^4$: கபிவரைர்
வீரைர் நலாத்$^3$யைர் வ்ருதோ
லங்காம் ப்ராப்ய ஸகும்ப$^4$கர்ணதநுஜம்
ஹத்வா ரணே ராவணம் ।
தஸ்யாம் ந்யஸ்ய விபீ$^4$ஷணம்
புநரஸௌ ஸீதாபதி: புஷ்பகா
ரூட$^4$: ஸந் புரமாக$^3$த: ஸப$^4$ரத:
ஸிம்ஹாஸநஸ்தே$^2$ா ப$^3$பௌ$^4$ ॥ 6

ஸ்ரீராமர், வீரர்களான நளன் முதலிய சிறந்த வானர்களால் சூழப்பட்டு, ஸமுத்திரதீரம் சென்று ஸமுத்திரத்திற்கு அணைபோட்டு, அதன்மூலம் இலங்கைக்குச் சென்று யுத்தத்தில் கும்பகர்ணன், இந்திரஜித் முதலியவர்களுள்பட இராவணனைக்கொன்று, அந்த இலங்கையில் விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து, மறுபடியும் ஸீதாஸமேதராய் புஷ்பக விமானத்தில் ஏறிக்கொண்டு அயோத்திக்கு வந்து பட்டாபிஷேகம் செய்துகொண்டு ஸிம்ஹாஸநத்தில் அமர்ந்து பிரகாசித்தார். பரதன் இளவரசனாக ஆனான். (6)

वसिष्ठः — வஸிஷ்டர் :—

श्रीरामो हयमेधमुख्यमखकृत् सम्यक् प्रजाः पालयन्
कृत्वा राज्यमथानुजैश्च सुचिरं भूरि स्वधर्मान्वितौ ।
पुत्रौ भ्रातृसमन्वितौ कुशलवौ संस्थाप्य भूमण्डले
सोऽयोध्यापुरवासिभिश्च सरयूस्नातः प्रपेदे दिवम् ॥ 7

ஸ்ரீராமோ ஹயமேத[4]முக்[2]யமக[3]க்ருத்
ஸம்யக் ப்ரஜா: பாலயந்
க்ருத்வா ராஜ்யமத[2]ாநுஜை: ச
ஸுசிரம் பூ[4]ரி ஸ்வத[4]ர்மாந்விதௌ ।
புத்ரௌ ப்[4]ராத்ருஸமந்விதௌ
குச[1]லவௌ ஸம்ஸ்த[2]ாப்ய பூ[4]மண்ட[3]லே
ஸோऽயோத்[4]யாபுரவாஸிபி[4]: ச
ஸரயூஸ்நாத: ப்ரபேதே[3] தி[3]வம் || 7

ஸ்ரீராமர் அச்வமேதம் முதலிய சிறந்த யாகங்களை செய்துகொண்டும், குடிகளை நன்றாக பரிபாலனம் செய்துகொண்டும், வெகுகாலம் வரை தம்பிகளுடன்கூட விசாலமான இராஜ்யத்தை பரிபாலனம் செய்துவிட்டு கடைசியில் ஸ்வதர்மத்தில் பற்றுள்ள தன் பிள்ளைகளான குசலவர்களை தன் சகோதரர்களின் பிள்ளைகளுடன்கூட ஆங்காங்கு

பூமண்டலத்தில் அரசர்களாக ஸ்தாபனம் செய்துவிட்டு, அயோத்யாவாஸிஜனங்களுடன் ஸரயூநதியில் ஸ்நாநம் செய்து வைகுண்டத்திற்குச் சென்றூர். (7)

सर्वे ऋषयः — எல்லா ரிஷிகளும் :—

श्रीरामस्य कथासुधातिमधुरान् श्लोकानिमानुत्तमान्
ये शृण्वन्ति पठन्ति च प्रतिदिनं तेऽघौघविध्वंसिनः ।
श्रीमन्तो बहुपुत्रपौत्रसहिता भुक्त्वेह भोगांश्चिरं
भोगान्ते तु सदार्चितं सुरगणैर्विष्णोर्लभन्ते पदम् ॥ 8

ஸ்ரீராமஸ்ய கதா2ஸுதா4திமது4ராந்
ச்1லோகாநிமாநுத்தமாந்
யே ச்1ருண்வந்தி பட2ந்தி ச ப்ரதிதிநம்
தேऽகௌ4க4வித்4வம்ஸிந: ।
ஸ்ரீமந்தோ ப3ஹுபுத்ரபௌத்ரஸஹிதா
பு4க்த்வேஹ போ4கா3ம்ச்1சிரம்
போ4கா3ந்தே து ஸதா3ர்சிதம்
ஸுரக3ணைர் விஷ்ணோர்லப4ந்தே பத3ம் ॥ 8

ஸ்ரீ ராமருடைய அமிருதத்திற்கொப்பான கதையை வர்ணிப்பதால் மிக இனிமையான இச் சிறந்த சுலோகங்களை பிரதிதினம் எவர் படிக்கின்றனரோ, அல்லது கேட்கின்றனரோ, அவர்களுடைய பாவக் குவியல்கள் பறந்தோடும். ஸர்வைச்வர்ய ஸம்பந்நர்களாகி, பலபுத்ர பௌத்ரர்களுடன் கூட இந்த உலகில் வெகுகாலம்வரை பலவித ஸுக போகங்களை அநுபவித்து, கடைசியில் தேவர்களால் எப்பொழுதும் போற்றப்படும் ஸ்ரீவிஷ்ணுவின் ஸ்தானமாகிய வைகுண்டத்தை அடைவார்கள். (8)

# श्रीसीतारामस्तोत्रम् ॥

## ஸ்ரீஸீதாராம ஸ்தோத்ரம்

अयोध्यापुरनेतारं मिथिलापुरनायिकाम् ।
इक्ष्वाकूणामलङ्कारं विदेहानामलङ्क्रियाम् ॥ 1

அயோத்4யாபு4ரநேதாரம்
மிதி2லாபுர நாயிகாம் ।
இக்ஷ்வாகூணமலங்காரம்
விதே3ஹா நாமலங்க்ரியாம் ॥ 1

(இதன் பொருள்) அயோத்யாபுர நாயகர் (ஸ்ரீராமர்) மிதிலாபுர நாயிகை (ஸீதை) இக்ஷ்வாகு வம்சத்தினரை அலங்கரிப்பவர் (ஸ்ரீராமர்) ஜனகவம்சத்தினர்களை அலங்கரிப்பவள் (ஸீதை). (1)

இதைப்போலவே பின்வரும் சுலோகங்களில் முதல் பாதம் ஸ்ரீராமரையும் இரண்டாம் பாதம் ஸீதையையும் குறிப்பிடும். "இருவர்களையும் வணங்கி கிருதார்த்தனுக ஆகின்றேன்" என ஒன்பதாவது சுலோகத்தில் இதுபூர்த்தி யடைகின்றது.

रघूणां कुलदीपं च निमीनां कुलदीपिकाम् ।
सूर्यवंशसमुद्भूतं सोमवंशसमुद्भवाम् ॥ 2

ரகூ4ணும் குலதீ3பம் ச
நிமீநாம் குலதீ3பிகாம் ।
ஸூர்யவம்ச ஸமுத்பூ4தம்
ஸோமவம்சஸமுத்3ப4வாம் ॥ 2

(இ-ள்) இரகு குலத்தை தீபம்போல் விளங்க வைப்பவர். நிமிகுலத்தைப் பிரகாசப் படுத்தும் தீபம் போன்றவள். ஸூர்யவம்சத்தில் உதித்தவர். சந்திரவம்சத்தில் தோன்றியவள்.

पुत्रं दशरथस्यापि पुत्रीं जनकभूपतेः ।
वसिष्ठानुमताचारं शतानन्दमतानुगाम् ॥ 3

புத்ரம் த3சரத2ஸ்யாபி
புத்ரீம் ஜநகபூ4பதே:।
வஸிஷ்டா2நுமதாசாரம்
ச1தாநந்த3மதாநுகா3ம்॥ 3

(இ-ள்) தசரதருடைய புதல்வர். ஜனக மஹாராஜனுடைய புதல்வி. வஸிஷ்டருடைய உபதேசப்படி நடப்பவர். சதாநந்தருடைய மதத்தைப் பின்பற்றுகின்றவள். (3)

कौसल्यागर्भसंभूतं वेदिगर्भोदितां स्वयम् ।
पुण्डरीकविशालाक्षं स्फुरदिन्दीवरेक्षणाम् ॥ 4

கௌஸல்யாக3ர்ப4ஸம்பூ4தம்
வேதி3க3ர்போ4தி3தாம் ஸ்வயம்।
புண்ட3ரீக விசா1லாக்ஷம்
ஸ்பு2ரதி3ந்தீ3வரேக்ஷணாம்॥ 4

(இ-ள்) கௌசல்யையின் கர்ப்பத்தில் தோன்றியவர். வேதியில் (யாகம் செய்வதற்காக உழப்பட்ட பூமியில்) தானாகத் தோன்றியவள். தாமரை புஷ்பம்போல் விசாலமான கண்களையுடைவர். மலர்ந்த இந்தீவரம்போன்ற கண்களையுடையவள்.

मत्तमातङ्गगमनं मत्तसारसगामिनीम् ।
तालीदलश्यामलाङ्गं तप्तचामीकरप्रभाम् ॥ 5

மத்தமாதங்க3க3மநம்
மத்தஸாரஸகா3மிநீம்।
தாளீத3ளச்1யாமளாங்க3ம்
தப்தசாமீகரப்ரபா4ம்॥ 5

மத்தகஜம்போன்ற நடையுடையவர். மதம்பிடித்த ஸாரஸபக்ஷிபோன்ற நடையுடையவள். ஸ்ரீதாள தளம்போல் ச்யாமளமான உடலையுடையவர். உருக்கின தங்கம்போன்ற தேக காந்தியையுடையவள்.

चन्दनार्द्रभुजामध्यं कुङ्कुमाक्तभुजान्तराम् ।
चापालङ्कृतहस्ताब्जं पद्मालङ्कृतपाणिकाम् ॥ 6

சந்த$^{3}$நார்த்$^{3}$ரபு$^{4}$ஜாமத்யம்
குங்குமாக்த பு$^{3}$ஜாந்தராம் |
சாபாலங்க்ருத ஹஸ்தாப்$^{4}$ஜம்
பத்$^{3}$மாலங்க்ருதபாணிகாம் || 6

(இ-ள்) சந்தனத்தால் நனைந்த மார்புடையவர். குங்கும த்ரவத்தை யணிந்த மார்பையுடையவள். வில்லினுல் அலங்கரிக்கப்பட்ட கையையுடையவர். தாமரை புஷ்பத்தால் அலங்கரிக்கப்பட்ட கையையுடையவள்.

सर्वलोकविधातारं सर्वलोकविधायिनीम् ।
लोकाभिरामं श्रीरामं अभिरामां च मैथिलीम् ॥ 7

ஸர்வலோக வித$^{4}$ாதாரம்
ஸர்வலோக வித$^{4}$ாயிநீம் |
லோகாபி$^{4}$ராமம் ஸ்ரீராமம்
அபி$^{4}$ராமாம் ச மைதி$^{2}$லீம் || 7

(இ-ள், எல்லா உலகங்களையும் படைத்தவர். உலகமனைத்தையும் சிரிஷ்டித்தவள். உலகிலேயே அழகிய புருஷன் ஸ்ரீராமன். ரமணீயமான சுந்தரீ மைதிலி.

दिव्यसिंहासनारूढं दिव्यस्रग्वस्त्रभूषणाम् ।
अनुक्षणं कटाक्षाभ्यामन्योन्येक्षणकांक्षिणौ ॥ 8

தி3வ்யஸிம்ஹாஸநாரூட4ம்
தி3வ்யஸ்ரக்3வஸ்த்ர பூ4ஷணம் ।
அநுக்ஷணம் கடாக்ஷாப்4யாம
ந்யோந்யேக்ஷண காங்க்ஷிணௌ ॥ 8

(இ-ள்) திவ்யஸிம்ஹாஸனத்தில் வீற்றிருப்பவர் ஸ்ரீராமர். திவ்யமான மாலை, வஸ்திரம், ஆபரணம் இவற்றை அணிந்திருப்பவள் ஸீதை. ஒவ்வொரு க்ஷணமும் ஒருவரை யொருவர் கடைக்கண்ணால் பார்க்க விரும்புகின்றவர்கள்.

**अन्योन्यसदृशावेतौ त्रैलोक्यगृहदंपती ।**
**इमौ युवां प्रणम्याहं भजाम्यधिकृतार्थताम् ॥ 9**

அந்யோந்யஸத்3ருச1ாவேதௌ
த்ரைலோக்யக்3ருஹத3ம்பதீ ।
இமௌ யுவாம் ப்ரணம்யாஹம்
ப4ஜாம்யதி4 க்ருதார்த2 தாம் ॥ 9

(இ-ள்) மூவுலகங்களாகிற கிருஹத்தில் தம்பதிகளாக விளங்கும் தாங்கள் எல்லா அம்சங்களிலும் ஒருவரை யொருவர் ஒத்திருப்பவர்கள். இப்படிப்பட்ட தங்கள் இருவரையும் வணங்கி நான் கிருதார்த்தனாக ஆகின்றேன்.

**अनया स्तौति यः स्तुत्या रामं सीतां च भक्तितः ।**
**तस्य तौ तनुतां प्रीतौ संपदः सकला अपि ॥ 10**

அநயா ஸ்தௌதி ய: ஸ்துத்யா
ராமம் ஸீதாம் ச ப4க்தித: ।
தஸ்ய தௌ தநுதாம் ப்ரீதௌ
ஸம்பத3: ஸகலா அபி ॥ 10

(இ-ள்) எவர் இந்த ஸ்தோத்ரத்தில் பக்தியுடன் இராமனையும் ஸீதையையும் துதிக்கின்றனரோ, அவர்களுக்கு (ஸ்தோத்ரத்தால்) பிரீதியடைந்த ஸ்ரீராமனும் ஸீதையும் எல்லா ஸம்பத்துக்களையுமளிக்கின்றனர்.

इतीदं रामचन्द्रस्य जानक्याश्च विशेषतः ।
कृतं हनूमता पुण्यं स्तोत्रं सद्यो विमुक्तिदम् ॥
यः पठेत् प्रातरुत्थाय सर्वान् कामानवाप्नुयात् ॥ 11

இதீத3ம் ராமசந்த்3ரஸ்ய
ஜாநக்யா: ச விசே1ஷத: ।
க்ருதம் ஹநூமதா புண்யம்
ஸ்தோத்ரம் ஸத்3யோ விமுக்தித3ம் ॥
ய: படே2த் ப்ராதருத்த2ாய ।
ஸர்வாந் காமாநவாப்நுயாத் ॥ 11

(இ-ள்) இராமசந்திரனையும் ஸீதையையும் குறித்து ஹநுமானால் இயற்றப்பட்ட, விரைவில் புண்யத்தையும் முக்தியையும் அளிக்கக்கூடிய, இந்த ஸ்தோத்ரத்தை எவர் காலையில் எழுந்திருந்து படிக்கின்றனரோ. அவர்கள் விரும்பிய பயன்களையெல்லாம் அடைவார்கள்.

य इदं पठति स्तोत्रं मैथिलीरामचन्द्रयोः ।
श्रीवैकुण्ठमवाप्नोति स नरो हतकिल्बिषः ॥ 12

ய இத3ம் பட2தி ஸ்தோத்ரம்
மைதி2லீ ராமசந்த்3ரயோ: ।
ஸ்ரீவைகுண்ட2மவாப்நோதி
ஸ நரோ ஹதகில்பி3ஷ: ॥ 12

(இ-ள்) இந்த ஸீதாராமசந்திர ஸ்தோத்ரத்தை எவர் படிக்கின்றனரோ, அவர்கள் பாவமற்றவர்களாக ஆகி ஸ்ரீவைகுண்டத்தை அடைகின்றனர்.

(குறிப்பு) சிலர் அடியிற் கண்டவற்றையும் இந்த ஸ்தோத்ரத்தில் சேர்ந்ததாகக் கருதுகின்றனர். அப்படியானால் ஏழாவது சுலோகத்திற்குப் பின் இவற்றைச் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

चन्द्रकान्ताननाम्भोजं चन्द्रबिम्बोपमाननाम् ।
शरणागतगोप्तारं प्रणिपातप्रसादिकाम् ॥
कालमेघनिभं रामं कार्तस्वरसमप्रभाम् ॥ 13

சந்த்$^{3}$ரகாந்தாநநாம்பே$^{4}$ாஜம்
சந்த்$^{3}$ரபி$^{3}$ம்பே$^{3}$ாபமாநநாம் ।
ச$^{1}$ரணாக$^{3}$தகோப்தாரம்
ப்ரணிபாதப்ரஸாதி$^{3}$காம் ॥
காலமேக$^{4}$நிப$^{4}$ம் ராமம்
கார்த்தஸ்வரஸமப்ரப$^{4}$ாம் ॥ 13

(இ-ள்) சந்திரன்போல் அழகிய முகத்தையுடையவர். சந்திரபிம்பத்திற்கொப்பான முகத்தையுடையவள். சரணமடைந்தவர்களை இரக்ஷிப்பவர், நமஸ்காரத்தால்மட்டும் அருள்புரிகின்றவள். நீருண்ட மேகத்திற்கொப்பான உடலையுடையவர் இராமர். சுவர்ணத்திற்கொப்பான காந்தியையுடையவள் சீதை.



# श्रीरामचन्द्रस्तुतिः ॥

## ஸ்ரீ ராமசந்த்ர ஸ்துதி

### ஸ்ரீ ராமசந்த்ர வராஷ்டகம்

श्रीशिव उवाच — ஸ்ரீசிவன் சொல்லுகிறார் ,—

सुग्रीवमित्रं परमं पवित्रं
सीताकलत्रं नवमेघगात्रम् ।
कारुण्यपात्रं शतपत्रनेत्रं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 1

ஸுக்$^{3}$ரீவமித்ரம் பரமம் பவித்ரம்
ஸீதாகலத்ரம் நவமேக$^{4}$க$^{3}$ாத்ரம் ।
காருண்யபாத்ரம் ச$^{1}$தபத்ரநேத்ரம்
ஸ்ரீராமசந்த்$^{3}$ரம் ஸததம் நமாமி ॥ 1

[ இது ஸ்ரீராமபட்டாபிஷேககாலத்தில் ஸ்ரீ பரமேச்வரன் ஸ்ரீராமனைக் குறித்து செய்த ஸ்தோத்ரம். இதற்கு ஸ்ரீராமசந்த்ர வராஷ்டகம் எனப் பெயரிடப்பட்டிருக்கிறது. இது ஆனந்த ராமாயணத்திலிருந்து எடுக்கப்பட்டது ]

(இ-ள் ) சுக்ரீவனுக்கு நண்பராயும், மிகபரிசுத்தராயும், ஸீதையை பார்யையாகப் பெற்றவரும், நீருண்டமேகம் போன்ற உடலையுடையவரும், கருணைக்கடலாயும், தாமரைப் புஷ்பம்போன்ற நேத்ரங்களையுடையவருமான ஸ்ரீராமசந்த்ரனை எப்பொழுதும் வணங்குகிறேன். (1)

संसारपारं निगमप्रचारं
धर्मावतारं हृतभूमिभारम् ।
सदाऽविकारं सुखसिन्धुसारं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 2

ஸம்ஸாரபாரம் நிக³மப்ரசாரம்
த⁴ர்மாவதாரம் ஹ்ருதபூ⁴மிபா⁴ரம்।
ஸதா³ऽவிகாரம் ஸுக²ஸிந்துஸாரம்
ஶ்ரீராமசந்த்³ரம் ஸததம் நமாமி॥ 2

(இ-ள்) ஸம்ஸாரத்திற்கு அப்பால்பட்டவரும், வேதத்தை பிரசாரம் செய்கின்றவரும், அல்லது வேதங்களில் சஞ்சரிக்கின்றவரும் (அதாவது வேதங்களால் மட்டும் அறியத் தகுந்தவரும்) தர்மத்தின் அவதாரமாயும், பூ பாரத்தை அகற்றியவரும், எப்பொழுதும் எவ்வித விகாரமுமற்றவரும், ஆனந்தக்கடலாயுமிருக்கின்ற ஶ்ரீராமசந்த்ரனை எப்பொழுதும் வணங்குகிறேன். (2)

लक्ष्मीनिवासं जगतां निवासं
लङ्काविनाशं भुवनप्रकाशम् ।
भूदेववासं शरदिन्दुहासं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 3

லக்ஷ்மீவிலாஸம் ஜக³தாம் நிவாஸம்
லங்காவிநாஶம் பு⁴வநப்ரகாஶம்।
பூ⁴தேவவாஸம் ஶரதி³ந்து³ஹாஸம்
ஶ்ரீராமசந்த்³ரம் ஸததம் நமாமி॥ 3

(இ-ள்) ஶ்ரீ லக்ஷ்மீகாந்தனும், ஜகத்திற்கெல்லாம் இருப்பிடமாயும், இலங்கையை அழித்தவரும், எல்லா உலகங்களிலும் மிகவும் பிரகாசிப்பவரும், அந்தணர்களிடம் வஸிப்பவரும், சரத்காலசந்திரன்போன்ற மந்தஹாஸத்தை யுடையவருமான ஶ்ரீராமசந்த்ரனை எப்பொழுதும் வணங்குகிறேன், (3)

मन्दारमालं वचने रसालं
गुणैर्विशालं हतसप्तसालम् ।
क्रव्यादकालं सुरलोकपालं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 4

மந்த$^{3}$ாரமாலம் வசநே ரஸாலம்
கு$^{3}$ணைர் விச$^{1}$ாலம் ஹதஸப்தஸாலம் |
க்ரவ்யாத$^{3}$காலம் ஸுரலோகபாலம்
ஸ்ரீராமசந்த்$^{3}$ரம் ஸததம் நமாமி || 4

(இ-ள்) மந்தார மலர்மாலையையணிந்தவரும், மாங்கனி போல் இனிய வார்த்தைகளைப் பேசுகின்றவரும், பல நற்குணங்களுடன் கூடியவரும், "ஸாலம்" என்ற ஏழு மரங்களைப் பிளந்தவரும், இராக்ஷஸர்களுக்கு யமன் போன்றவரும், தேவலோகத்தைக் காப்பவருமான ஸ்ரீ ராமசந்த்ரனை எப்பொழுதும் வணங்குகிறேன். (4)

वेदान्तगानं सकलैस्समानं
हतारिमानं त्रिदशप्रधानम् ।
गजेन्द्रयानं विगतावसानं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 5

வேதாந்தக$^{3}$ாநம் ஸகலைஸ்ஸமாநம்
ஹதாரிமாநம் த்ரிதச$^{1}$ப்ரத$^{4}$ாநம் |
க$^{3}$ஜேந்த்$^{3}$ரயாநம் விக$^{3}$தாவஸாநம்
ஸ்ரீராமசந்த்$^{3}$ரம் ஸததம் நமாமி || 5

(இ-ள்) வேதாந்தங்களால் கொண்டாடப்பட்டவரும், அனைவருடனும் ஸமமாகப் பழகுகின்றவரும், எதிரிகளின் கர்வத்தை அழித்தவரும், தேவர்களுள் மிகச் சிறந்தவராயும், யானைபோல் அழகிய நடையையுடையவரும், அழிவற்றவருமான ஸ்ரீராமசந்த்ரனை எப்பொழுதும் வணங்குகின்றேன். (5)

श्यामाभिरामं नयनाभिरामं
गुणाभिरामं वचनाभिरामम् ।
विश्वप्रणामं कृतभक्तकामं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 6

ச்1யாமாபி4ராமம் நயநாபி4ராமம்
கு3ணாபி4ராமம் வசநாபி4ராமம்।
விச்1வப்ரணாமம் க்ருதப4க்தகாமம்
ஸ்ரீராமசந்த்3ரம் ஸததம் நமாமி|| 6

(இ-ள்) சியாமளவர்ணம், அழகிய கண்கள், உயர்ந்த குணங்கள், இனிய சொற்கள் இவை எல்லாவற்றுலும் மிகவும் ரமணீயராயும், அனைவராலும் வணங்கப் படுகின்றவரும், பக்தர்களின் இஷ்டங்களை பூர்த்தி செய்கின்றவருமான ஸ்ரீராமசந்திரனை எப்பொழுதும் வணங்குகின்றேன். (6)

लीलाशरीरं रणरङ्गधीरं
विश्वैकसारं रघुवंशहारम् ।
गम्भीरनादं जितसर्ववादं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 7

லீலாச1ரீரம் ரணரங்க3தீ4ரம்
விச்1வைகஸாரம் ரகு4வம்ச1ஹாரம்|
க3ம்பீ4ரநாத3ம் ஜிதஸர்வவாத3ம்
ஸ்ரீராமசந்த்3ரம் ஸததம் நமாமி|| 7

(இ-ள்) (உண்மையில் ஜனனமரணமற்றவராலும்) உலகில் பலவித க்ரீடைகளைச் செய்வதற்கென்று தாமாகவே மானிட உடலை ஏற்றுக்கொண்டவரும், போர்க்களத்தில் மிகவும் தீரராயும், உலகிலேயே மிகச் சிறந்தவராயும், இரகு

வம்சத்திற்கு மாலை போன்றவரும் (மாலைபோல் இரகு வம்சத்தை அலங்கரிப்பவரும்) கம்பீரமான த்வனியையுடைய வரும், எல்லாவித வாதங்களிலும் (உண்மையை அறிவதற் கென கக்ஷிப்ரதிகக்ஷிகளை எடுத்துரைப்பதில்) வெற்றிகண்ட வருமான ஸ்ரீராமசந்த்ரனை எப்பொழுதும் வணங்குகின் றேன். (7)

खले कृतान्तं स्वजने विनीतं
सामोपगीतं मनसा प्रतीतम् ।
रागेण गीतं वचनादतीतं
श्रीरामचन्द्रं सततं नमामि ॥ 8

க²லே க்ருதாந்தம் ஸ்வஜநே விநீதம்
ஸாமோபகீ³தம் மநஸா ப்ரதீதம் ।
ராகே³ண கீ³தம் வசநாத³தீதம்
ஸ்ரீராமசந்த்³ரம் ஸததம் நமாமி ॥ 8

(இ-ள்) துஷ்டர்களிடம் யமன் போன்றவரும், தம்மைச் சேர்ந்தவர்களிடம் மிக வணக்கமுள்ளவரும், ஸாமவேதத் தால் கொண்டாடப்பட்டவரும், வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாத பரப்ரும்மஸ்வரூபமாகவும், அல்லது வாக் முதலிய மற்ற இந்திரியங்களுக்கு எட்டாதவரும், பரிசுத்தமான மன தால்மட்டும் அறியத் தகுந்தவரும், (அனைவராலும்) மிகப் பிரியத்துடன் போற்றப்பட்டவருமான ஸ்ரீராமசந்த்ரனை எப்பொழுதும் போற்றுகின்றேன். (8)

श्रीरामचन्द्रस्य वराष्टकं त्वां
मयेरितं देवि मनोहरं ये ।
पठन्ति शृण्वन्ति गृणन्ति भक्त्या
ते स्वीयकामान् प्रलभन्ति नित्यम् ॥ 9

ஸ்ரீராமசந்த்3ரஸ்ய வராஷ்டகம் த்வாம்
மயேரிதம் தே3வி மநோஹரம் யே।
பட2ந்தி ச்1ருண்வந்தி க்3ருணந்தி ப4க்த்யா
தே ஸ்வீயகாமாந் ப்ரலப4ந்தி நித்யம்॥ 9

(இ-ள்) ஏதேவி பார்வதி! ஸ்ரீராமசந்த்ரனைப் புகழும் "வராஷ்டகம்" என்ற இந்த இனிமையான ஸ்தோத்ரம் உன்னைக் குறித்து என்னால் கூறப்பட்டது. இதை எவர் பிரதி தினம் பக்தியுடன் படிக்கின்றனரோ, கேட்கின்றனரோ அல்லது பிறருக்குச் சொல்லுகின்றனரோ அவர்கள் தம் தம் அபீஷ்டங்களையெல்லாம் விசேஷமாக அடைகின்றனர். (9)

---

[பின்வரும் ஐந்து சுலோகங்கள் அத்யாத்ம ராமாயணத்திலிருந்து எடுக்கப்பட்டவை. அவற்றுள் 1, 2 சுலோகங்கள் அஹல்யையால் செய்யப்பட்ட ஸ்ரீராமசந்த்ர ஸ்துதியில் உள்ளவை. 3, 4 சுலோகங்கள் ஜடாயு செய்த ஸ்துதியில் உள்ளவை. 5. இந்திரன் செய்த ஸ்துதியில் உள்ளது.]

यत्पादपङ्कजरजः श्रुतिभिर्विमृग्यं
यन्नाभिपङ्कजभवः कमलासनश्च ।
यन्नामसाररसिको भगवान् पुरारिः
तं रामचन्द्रमनिशं हृदि भावयामि ॥ 1

யத்பாத3பங்கஜரஜ: ச்1ருதிபி4ர்விம்ருக்3யம்
யந்நாபி4பங்கஜப4வ: கமலாஸநச்1ச।
யந்நாமஸாரரஸிகோ ப4க3வாந் புராரி:
தம் ராமசந்த்3ரமநிச1ம் ஹ்ருதி3ப4ாவயாமி॥

(இ-ள்) எவருடைய திருவடித்தாமரையின் தூளிகள் வேதங்களால் தேடப்படுகின்றனவோ, எவருடைய நாபீகமலத்தில் பிருஹ்மா தோன்றினரோ, எவருடைய நாமாம்ருதத்தில் பகவான் பரமேச்வரன் ரஸித்துக்கொண்டிருக்கிறரோ, அப்படிப்பட்ட ராமசந்த்ரனை எப்பொழுதும் மனதில் த்யானம் செய்கின்றேன். (1)

भवभयहरमेकं भानुकोटिप्रकाशं
करधृतशरचापं कालमेघावभासम् ।
कनकरुचिरवस्त्रं रत्नवत्कुण्डलाढ्यं
कमलविशदनेत्रं सानुजं राममीडे ॥ 2

ப[4]வப[4]யஹரமேகம் ப[4]ாநுகோடிப்ரகாச[1]ம்
கரத்[4]ருதச[1]ரசாபம் காலமேக[4]ாவப[4]ாஸம் ।
கநகருசிரவஸ்த்ரம் ரத்நவத்குண்ட[3]லாட்[4]யம்
கமலவிச[1]த[3]நேத்ரம் ஸாநுஜம் ராமமீடே[3] ॥

(இ-ள்) ஸம்ஸார பயத்தை அழிக்கும் ஒரே தெய்வமாயும், 'கோடி சூர்ய ப்ரகாசராயும், வில்லையும் அம்பையும் கையில் தரித்துக்கொண்டிருப்பவரும், நீருண்ட மேகம் போல் விளங்குகின்றவரும், ஸுவர்ணம்போல் அழகிய பீதாம்பரத்தை அணிந்தவரும், இரத்தினங்கள் இழைத்த குண்டலங்களை யணிந்தவரும், தாமரைப் புஷ்பம்போல் ஸ்வச்சமான கண்களையுடையவரும் இலக்ஷ்மணனுடன் சேர்ந்திருப்பவருமான ஸ்ரீராமனைப் போற்றுகின்றேன். (2)

भवविपिनदवाग्निनामधेयं
भवमुखदैवतदैवतं दयालुम् ।
दनुजपतिसहस्रकोटिनाशं
रवितनयासदृशं हरिं प्रपद्ये । 3

ப[4]வவிபிநத[3]வாக்நிநாமதே[4]யம்
ப[4]வமுக[2]தை[3]வததை[3]வதம் த[3]யாலும் ।
த[3]நுஜபதிஸஹஸ்ரகோடிநாச[1]ம்
ரவிதநயாஸத்[3]ருச[1]ம் ஹரிம் ப்ரபத்[3]யே ॥ 3

(இ-ள்) ஸம்ஸாரமென்ற காட்டை அழிப்பதில் காட்டுத் தீபோன்ற நாமதேயத்தை யுடையவரும், மஹேச்வரன் முதலிய தேவர்களெல்லாம் பூஜிக்கத்தகுந்த தெய்வமாயும், கோடிக்கணக்கான அரக்கர்களை அழித்தவராயும், யமுனா ஜலம்போல் ச்யாமள வர்ணத்துடன் விளங்குகின்றவருமான ஸ்ரீஹரியை (ஸ்ரீராமனை) சரணமடைகின்றேன். (3)

परधनपरदारवर्जितानां
परगुणभूतिषु तुष्टमानसानाम् ।
परहितनिरतात्मनां सुसेव्यं
रघुवरमम्बुजलोचनं प्रपद्ये ॥ 4

பரத[4]நபரத[3]ாரவர்ஜிதாநாம்
பரகு[3]ணபூ[4]திஷு துஷ்டமாநஸாநாம் ।
பரஹிதநிரதாத்மநாம் ஸுஸேவ்யம்
ரகு[4]வரமம்பு[3]ஜலோசநம் ப்ரபத்[3]யே ॥ 4

(இ-ள்) பிறர் பொருள், ஸ்திரீ இவற்றில் அறவே ஆசையற்றவர்களும், பிறருடைய குணங்கள், ஐச்வர்யங்கள் இவற்றைக் கண்டு ஸந்தோஷப்படுகின்றவர்களும், பிறருடைய நன்மையில் எப்பொழுதும் ஈடுபடுகின்றவர்களுமான மஹான்களால் நன்கு ஸேவிக்கத்தக்கவரும், தாமரைப் புஷ்பம்போன்ற நேத்திரத்தையுடையவருமான இரகுநாதனை சரணமடைகின்றேன். (4)

भजेऽहं सदा राममिन्दीवराभं
भवारण्यदावानलाभाभिधानम् ।
भवानीहृदा भावितानन्दरूपं
भवाभावरूपं भवादिप्रपन्नम् ॥ 5

ப$^4$ஜேஹம் ஸதா$^3$ ராமமிந்தீ$^3$வராப$^4$ம்
ப$^4$வாரண்யத$^3$ாவாநலாப$^4$ாபி$^4$தா$^4$நம் ।
ப$^4$வாநீஹ்ருத$^3$ா ப$^4$ாவிதாநந்த$^3$ரூபம்
ப$^4$வாப$^4$ாவரூபம் ப$^4$வாதி$^3$ப்ரபந்நம் ॥ 5

(இ-ள்) இந்தீவர புஷ்பம்போல் பிரகாசிப்பவரும், ஸம்ஸாரமாகிற காட்டிற்கு காட்டுத்தீ போன்ற நாம தேயத்தையுடையவரும், பார்வதியால் ஆனந்த ஸ்வரூபமாக த்யானம் செய்யப்பட்டவரும், ஜனனம்-மரணம் முதலிய பந்தமற்றவரும். பரமேச்வரன் முதலிய தேவர்களால் ஆச்ரயிக்கப்படுகின்றவருமான ஸ்ரீராமனை எப்பொழுதும் நான் பஜனம் செய்கின்றேன். (5)

---

पवित्रं चरित्रं विचित्रं त्वदीयं
नरा ये स्मरन्त्यन्वहं रामचन्द्र ।
भवन्तं भवान्तं भरन्तं भजन्तो
लभन्ते कृतान्तं न पश्यन्त्यतोऽन्ते ॥ 6

பவித்ரம் சரித்ரம் விசித்ரம் த்வதீ$^3$யம்
நரா யே ஸ்மரந்த்யந்வஹம் ராமசந்த்$^3$ர ।
ப$^4$வந்தம் ப$^4$வாந்தம் ப$^4$ரந்தம் ப$^3$ஜந்தோ
லப$^4$ந்தே க்ருதாந்தம் ந பச்$^1$யந்த்யதோந்தே ॥

(இ-ள்) ஏ ராமசந்த்ர ! எவர் விசித்ரமாயும், பாவநமாயுமுள்ள தங்களது சரித்திரத்தை பிரதி தினம் ஸ்மரிக்கின்றனரோ, அவர்கள் மோக்ஷத்தையளிக்கும் தங்களையே அடைகின்றனர். இறுதியில் யமனைக்காணவே மாட்டார்கள்.

(இது ஸ்ரீ ஆதிசங்கராசார்யஸ்வாமிகள் அருளிச்செய்த ஸ்ரீராமபுஜங்க ஸ்தோத்ரத்திலிருந்து எடுக்கப்பட்டது).

रामस्सीतासमेतो निवसतु हृदये सानुजं राममीडे
रामेण क्षीणपापस्त्रिविधमपि कृतं कर्म रामाय दद्याम्।
रामादन्यं न जाने न हि किमपि वचो रामनाम्नस्समानं
रामे पश्यामि विश्वं भुवनमनुदिनं पाहि मां वीरराम ॥

ராமஸ்ஸீதாஸமேதோ நிவஸது ஹ்ருத[3]யே
ஸாநுஜம் ராமமீடே[3]
ராமேண க்ஷீணபாபஸ்த்ரிவித[4]மபி க்ருதம்
கர்ம ராமாய த[3]த்[3]யாம்।
ராமாத[3]ந்யம் ந ஜாநே ந ஹி கிமபி வசோ
ராமநாம்நஸ்ஸமாநம்
ராமே பச்[1]யாமி விச்[1]வம் பு[4]வநமநுதி[3]நம்
பாஹி மாம் வீரராம॥ 1

ஸ்ரீராமன் ஸீதையுடன்கூட எனது ஹ்ருதயத்தில் எப்பொழுதும் வாஸம் செய்யட்டும். சஹோதரர்களுடன் கூடிய ஸ்ரீராமனை நான் துதிக்கிறேன். ஸ்ரீராமனுல் (ஸ்ரீராம த்யானத்தால்) என்னுடைய பாபங்கள் எல்லாம் அழிந்து விட்டன. என்னுல் செய்யப்படும் காயிகம், வாசிகம் மானஸிகம் என்ற மூவகைக் கர்மாக்களையும் ஸ்ரீராமன் பொருட்டே அர்ப்பணம் செய்கிறேன். ஸ்ரீராமனைத் தவிர வேறு யாரையும் நான் அறியேன். ஸ்ரீராமநாமாவுக்குச் சமமான வார்த்தை எதுவுமில்லை. இவ்வுலகம் முழுவதையும் ஸ்ரீராமனிடமே நான் காண்கின்றேன். ஹே! ராமா! என்னை எப்பொழுதும் காத்தருளவேண்டும்.

இச்சுலோகத்தில் ஸ்ரீராமனை எட்டு விபக்திகளாலும் குறிப்பிட்டுப் போற்றுகிருர் என்பது குறிப்பிடத்தக்கது. (1)

विमलकमलनेत्रं विस्फुरन्नीलगात्रं
तपनकुलपवित्रं दानवध्वान्तमित्रम् ।
भुवनशुभचरित्रं भूमिपुत्रीकलत्रं
दशरथवरपुत्रं नौमि रामाख्यमित्रम् ॥ 2

விமலகமலநேத்ரம் விஸ்பு2ரந்நீலக3ாத்ரம்
தபநகுலபவித்ரம் த3ாநவத்4வாந்தமித்ரம்।
பு4வநசு1பசரித்ரம் பூ4மிபுத்ரீகலத்ரம்
த3ச1ரத2வரபுத்ரம் நௌமி ராமாக்2யமித்ரம்॥

நிர்மலமான தாமரைபோன்ற நேத்திரத்தை உடையவரும், நீலமாகப் பிரகாசிக்கும் காத்திரத்தைப் பெற்றவரும், சூர்யகுல பவித்ரராயும், சூர்யகுலத்தை சுத்தம் செய்கின்றவராயும், அசுரர்களாகிற இருளுக்கு மித்ரன் (சூர்யன்) போன்றவரும், உலகங்களுக்கெல்லாம் மங்களகரமான சரித்திரத்தையுடையவரும், பூமிபுத்ரியை (ஸீதையை) களத்ரமாக (மனைவியாக)ப் பெற்றவரும், தசரதரின் சிறந்த புத்ரருமான ஸ்ரீராமன் என்று பெயர் பெற்ற மித்ரனை (எல்லா உலகங்களுக்கும் தோழனை) வணங்குகிறேன். (2)

माता रामो मत्पिता रामचन्द्रो
भ्राता रामो मत्सखा राघवेशः ।
सर्वस्वं मे रामचन्द्रो दयालुः
नान्यत् दैवं नैव जाने न जाने ॥ 3

மாதா ராமோ மத்பிதா ராமசந்த்3ரோ
ப்4ராதா ராமோ மத்ஸக2ா ராக4வேச1:।
ஸர்வஸ்வம் மே ராமசந்த்3ரோ த3யாலு:
நாந்யத் தை3வம் நைவ ஜாநே ந ஜாநே॥

என் தாயும் ராமன், என் தகப்பனும் ஸ்ரீராமச்சந்திரன். சகோதரனும் ஸ்ரீராமன். என் தோழனும் ஸ்ரீராமன். என் சொத்தெல்லாமும் பரமகருணாமூர்த்தியான ஸ்ரீராமனே. வேறு தெய்வத்தை நான் ஒருபொழுதும் அறியேன். (3)

**जननी जानकी साक्षात् जनको रघुनन्दनः ।**
**लक्ष्मणो मित्रमस्माकं को विचारः कुतो भयम् ॥ 4**

ஜநநீ ஜாநகீ ஸாக்ஷாத்
ஜநகோ ரகு4நந்த3ந: ।
லக்ஷ்மணோ மித்ரமஸ்மாகம்
கோ விசார: குதோ ப4யம் ॥ 4

ஜானகீ எங்கள் தாய். ஸ்ரீராமன் எங்கள் தகப்பன். இலக்ஷ்மணன் எங்களுடைய தோழன். அப்படியிருக்க எங்களுக்கு என்ன விசாரம்? எங்களுக்கு ஏது பயம்? (4)

**जानाति राम तव नामरुचिं महेशो**
**जानाति गौतमसती चरणप्रभावम् ।**
**जानाति दोर्बलपराक्रममीशचापो**
**जानात्यमोघपटुबाणगतिं पयोधिः ॥ 5**

ஜாநாதி ராம தவ நாமருசிம் மஹேசோ1
ஜாநாதி கௌ3தமஸதீ சரணப்ரப4ாவம் ।
ஜாநாதி தோ3ர்ப3லபராக்ரமமீச1சாபோ
ஜாநாத்யமோக4படுபா3ணக3திம் பயோதி4: ॥

ஹே! ராமா! தங்கள் நாமாவின் ருசியை ஸ்ரீமஹேச்வரனே அறிவார். தங்கள் சரணங்களின் ப்ரபாவத்தை கௌதமரின் பத்னியான அஹல்யை அறிவாள். தங்கள் புஜபலபராக்ரமத்தை ஸ்ரீபரமேச்வரனுடைய வில் நன்கு

அறியும். தங்களுடைய பழுதற்ற வலிமையுள்ள அம்பின் வேகத்தை ஸமுத்ரராஜனே அறிவான்.

[ஸ்ரீ பரமேச்வரன் இடைவிடாமல் ஸ்ரீ ராமநாம ஜபத்தையே செய்துகொண்டிருப்பதால் அதன் ருசியை மற்றவர்களைவிட அவர் நன்கு உணர்ந்திருக்கிறார் எனத் தெரிய வருகிறது.

**மஹேசோ ஜிஹ்வாயா: க்ஷணமபி ஸ நைவோஜ்ஜி[4] து மலம்" "ஸ்ரீ பரமேச்வரன் ஸ்ரீ ராம நாமத்தை ஒரு க்ஷணம் கூட அவர் நாக்கைவிட்டுப்பிரிந்திருக்கும்படி செய்ய சக்தியற்றவராக இருக்கிறார்,' என்று ஸ்ரீ அய்யாவாளும் குறிப்பிட்டிருக்கிறார்கள். கல்லாக இருந்த அஹல்யை ஸ்ரீராமபாததூளியின் சம்பந்தத்தால் பெண்ணாக ஆகிவிட்டபடியால் மற்றவர்களைவிட அவளே ராமசரணத்தின் பெருமையை நன்கு அறிவாள். ஸீதையின் விவாஹத்திற்கு பந்தயமாக வைக்கப்பட்டிருந்த ஸ்ரீ பரமேச்வரனுடைய வில்லை ஸ்ரீராமன் முறித்தகாலத்தில் ஸ்ரீராமருடைய புஜபலம் வெளியானபடியால் ஸ்ரீ பரமேச்வரனுடைய வில் புஜபலத்தை அறியும் என்று கூறப்பட்டிருக்கிறது. ஸ்ரீராமனுடைய பாண வேகத்தால் யாருக்கும் இணங்காத ஸமுத்ர ராஜன் ராமனுக்கு இணங்கி அணை கட்டிக்கொள்ளவும் சம்மதித்தான். ஆதலால் பாணவேகத்தை ஸமுத்ரராஜன் நன்கு உணர்த்திருக்கிறான் என்று கூறப்படுகிறது. (5)**

जानाति राम तव तत्त्वगतिं हनूमान्
जानाति राम तव सख्यगतिं कपीशः ।
जानाति राम तव युद्धगतिं दशास्यो
जानाति राम धनदानुज एव सत्यम् ॥ 6

ஜாநாதி ராம தவ தத்வக[3]திம் ஹநூமாந்
ஜாநாதி ராம தவ ஸக்யக[3]திம் கபீச[1]:।
ஜாநாதி ராம தவ யுத்[3]த[4]க[3]திம் த[3]ச[1]ாஸ்யோ
ஜாநாதி ராம த[4]நத[3]ாநுஜ ஏவ ஸத்யம்॥

ஹே! ராம! தங்களுடைய ஸ்வரூபத்தின் தத்துவத்தை ஹநுமானே அறிவான். ஹே! ராம! தங்கள் சிநேகத்தின் போக்கை சுக்ரீவனே உணர்வான். ஹே! ராம! தாங்கள் சண்டை செய்யும் ரீதியை இராவணனே அறிவான்! ஹே! ராம! தங்களுடைய உண்மை பேசுந்தன்மையை விபீஷணனே அறிவான்.

[இராமர் இராவணனை ஸம்ஹாரம் செய்வதற்கு முன்னமே விபீஷணனை இலங்கைக்குத் தலைவனாகப் பட்டாபிஷேகம் செய்துவிட்டார். அதை ஸத்தியமாகச் செய்யவேண்டுமென்ற முக்கியநோக்கத்துடனேயே இராவணனைக் கொன்று விபீஷணனை உண்மை அரசனாகச் செய்துவிட்டார். ஆதலால் மற்றவர்களை விட விபீஷணன் "ஸ்ரீராமர்ஸத்யஸந்தர்" என்பதை நன்கு உணர்வான் என்று வர்ணிக்கப்பட்டிருக்கிறது.

**शृङ्गारं क्षितिनन्दिनीविहरणे वीरं धनुर्भञ्जने**
**कारुण्यं बलिभोजनेऽद्भुतरसं सिन्धौ गिरिस्थापने ।**
**हास्यं शूर्पणखामुखे भयमघे भीभत्समन्यामुखे**
**रौद्रं रावणमर्दने मुनिजने शान्तं वपुः पातु वः ॥ 7**

ச்1ருங்க3ாரம் க்ஷிதிநந்தி3நீவிஹரணே
வீரம் த4நுர்ப்ப4ஞ்ஜநே
காருண்யம் ப3லிபோ4ஜநே5ऽத்3பு4தரஸம்
ஸிந்தௌ4 கி3ரிஸ்த2ாபநே।
ஹாஸ்யம் சூ1ர்ப்பணக2ாமுகே2 ப4யமகே4
பீ3ப4த்ஸமந்யாமுகே2
ரௌத்3ரம் ராவணமர்த்த3நே
முநிஜநே ச1ாந்தம் வபு: பாது வ:॥ 7

ஜானகியுடன் உல்லாசமாக க்ரீடிக்கும் காலத்தில் சிருங்கார ரஸத்துடனும், பரமேச்வரனுடைய வில்லை முறிக்கும்காலத்தில் வீர ரஸத்துடனும், காகாஸுரனை சிக்ஷிக்கும்

காலத்தில் கருணரஸத்துடனும், ஸமுத்திரத்தில் மலைகளைப் போட்டு அணைகளை கட்டுங்காலத்தில் அத்புதரஸத்துடனும், சூர்ப்பணகையின் முகத்தை பங்கம் செய்யும் காலத்தில் ஹாஸ்யரஸத்துடனும், பாபகரமான காரியங்களைக் கண்டால் பயானகரஸத்துடனும், அந்நிய ஸ்திரீகளின் முகத்தைப் பார்க்கும் காலத்தில் பீபத்ஸரஸத்துடனும், ராவணனைக்கொல்லும்காலத்தில் ரௌத்ரரஸத்துடனும், முனிஜனங்களை நோக்குங்காலத்தில் சாந்தரஸத்துடன், விளங்கும் ஸ்ரீராமனுடைய உடல் உங்களை இரக்ஷிக்கட்டும்.

भूकम्पं जनयन्नभो विदलयन्नम्भोनिधिं क्षोभयन्
दैतेयांश्च विमर्दयन् गिरिवरान् छिन्दन् दिशः पूरयन् ।
वैदेहीमतिमोदयन् सकलगीर्वाणान् शिरः कम्पयन्
कल्याणो रघुरामबाणविलसत्कोदण्डचण्डध्वनिः ॥ 8

பூ4கம்பம் ஜநயந்நபே4ா வித3லயந்
அம்பே4ாநிதி4ம் க்ஷோப4யந்
தை3தேயாம்ச்1ச விமர்த3யந் கி3ரிவராந்
சி2ந்த3ந் தி3ச1: பூரயந்।
வைதே3ஹீமதிமோத3யந் ஸகல
கீ3ர்வாணாந் சி1ர: கம்பயந்
கல்யாணோ ரகு4ராமபா3ணவிலஸத்
கோத3ண்ட3 சண்ட3த்4வநி: ॥ 8

ஸ்ரீ ராமபாணத்துடன் விளங்கும் கோதண்டம் என்ற வில்லின் த்வனியானது பூகம்பத்தை உண்டுபண்ணிக் கொண்டும், ஆகாயத்தைப் பிளந்துகொண்டும், ஸமுத்திரத்தைக் கலக்கிக்கொண்டும், அசுரர்களை அடித்துக் கொண்டும், பெரிய மலைகளைப் பிளந்துகொண்டும், திக்குகளை நிரப்பிக்கொண்டும், ஸீதைக்கு அதிக ஸந்தோஷத்தை உண்டுபண்ணிக்கொண்டும், எல்லா தேவர்களின் சிரஸுகளையும் ஆடும்படி செய்துகொண்டும், மங்களகரமாக உண்டாயிற்று. (8)

श्रीरामनामामृतमन्त्रबीजं
संजीवनं चेन्मनसि प्रतिष्ठितम् ।
हालाहलं वा प्रलयानलं वा
मृत्योर्मुखं वा वितथीकरोति ॥ 9

ஸ்ரீராமநாமாம்ருத மந்த்ரபீ3ஜம்
ஸஞ்ஜீவநம் சேந் மநஸி ப்ரதிஷ்டி2தம்।
ஹாலாஹலம் வா ப்ரலயாநலம் வா
ம்ருத்யோர் முக2ம் வா விததீ2கரோதி॥ 9

ஜீவனத்தை அளிக்கும் ஸ்ரீராம நாமாவாகிற அமிருத மந்திரத்தின் பீஜம் ஒருவனுடைய மனதில் நிலைபெற்றிருக்கும் பக்ஷத்தில், ஹாலாஹலம் என்ற கொடிய விஷமாக இருந்தாலும் சரி, பிரளயகால அக்னியாக இருந்தாலும் சரி, மிருத்யுவின் முகமாக இருந்தாலும் சரி, அவை எல்லாவற்றையும் அந்த சிறந்த மந்திரம் வியர்த்தமாகச் செய்துவிடுகிறது. (9)

प्रातः स्मरामि रघुनाथमुखारविन्दं
मन्दस्मितं मधुरभाषि विशालफालम् ।
कर्णावलम्बिचलकुण्डलगण्डभागं
कर्णान्तदीर्घनयनं नयनाभिरामम् ॥ 10

ப்ராத: ஸ்மராமி ரகு4நாதமுக2ாரவிந்த3ம்
மந்த3ஸ்மிதம் மது4ரபா4ஷி விச1ாலப2ாலம்।
கர்ணாவலம்பி3சலகுண்ட3ல க3ண்ட3 பா4க3ம்
கர்ணாந்ததீ3ர்க4நயநம் நயநாபி4ராமம்॥ 10

புன்னகையுடன் கூடியதும், இனிமையாகப்பேசும் ஸ்வபாவமுடையதும், விசாலமான நெற்றியைப் பெற்றதும், காதுகளில் தொங்கும் அசைந்தாடும் குண்டலங்களால்

விளங்கும் கன்னங்களையுடையதும், காதுவரை நீண்ட நேத்திரங்களைப்பெற்றதும், பார்க்கப் பார்க்கத் திகட்டாதது மான ஸ்ரீ ரகுநாதனுடைய முகாரவிந்தத்தை (தாமரை போன்ற முகத்தை) காலை வேளையில் ஸ்மரிக்கின்றேன். (10)

प्रातर्भजामि रघुनाथकरारविन्दं
रक्षोगणाय भयदं वरदं निजेभ्यः ।
यद्राजसंसदि विभिद्य महेशचापं
सीताकरग्रहणमङ्गलमाप सद्यः ॥ 11

ப்ராதர்ப4ஜாமி ரகு4நாத2கராரவிந்தம்
ரக்ஷோக3ணாய ப4யத3ம் வரத3ம் நிஜேப்4ய:।
யத்3ராஜஸம்ஸதி3 விபி4த்3ய மஹேச1சாபம்
ஸீதாகரக்ரஹணமங்களமாப ஸத்3ய: ॥ 11

இராக்ஷஸக் கூட்டங்களுக்கு பயத்தை அளிப்பதும், தன்னைச் சேர்ந்தவர்களுக்கு வரங்களை அளிப்பதும், ஜனக ராஜ ஸபையில் ஸ்ரீ பரமேச்வரனுடைய வில்லை முறித்து உடனே ஸீதாபாணிக்கிரஹணமங்களத்தைப் பெற்றதுமான ஸ்ரீரகு நாதனுடைய கராரவிந்தத்தை (தாமரை போன்ற கையை) காலையில் பஜனம் செய்கின்றேன். (11)

प्रातर्नमामि रघुनाथपदारविन्दं
पद्माङ्कुशादिशुभरेखशुभावहं मे ।
योगीन्द्रमानसमधुव्रतसेव्यमानं
शापापहं सपदि गौतमधर्मपत्न्याः ॥ 12

ப்ராதர் நமாமி ரகு4நாத2பதாரவிந்த3ம்
பத்3மாங்குசா1தி3 சு1ப4ரேக2 சு1பா4வஹம் மே।
யோகீ3ந்த்ரமாநஸமது4வ்ரதஸேவ்யமாநம்
சா1பாபஹம் ஸபதி3 கௌ3தமத4ர்மபத்ந்யா: ॥

தாமரை போலும் அங்குசம் போலும் உள்ள மங்கள கரமான ரேகைகளைப் பெற்றதும், எனக்கு மங்களங் களை அளிக்கக் கூடியதும், சிறந்த யோகிகளுடைய மனதாகிற வண்டுகளால் ஸேவிக்கப்படுகின்றதும், கௌதம தர்ம பத்நியான அஹல்யையின் சாபத்தை உடனே போக்கடித்ததுமான ஸ்ரீரகுநாதனுடைய சரணாரவிந்தத்தை காலையில் வணங்குகின்றேன். (12)

प्रातर्वदामि वचसा रघुनाथनाम
वाग्दोषहारि सकलं कलुषं निहत्य ।
यत्पार्वती स्वपतिना सह भोक्तुकामा
प्रीत्या सहस्रहरिनामसमं जजाप ॥ 13

ப்ராதர் வத[3]ாமி வசஸா ரகு[4]நாத[2]நாம
வாக்[3]தே[3]ாஷஹாரி ஸகலம் கலுஷம் நிஹத்ய ।
யத்பார்வதீ ஸ்வபதிநா ஸஹ பே[4]ாக்துகாமா
ப்ரீத்யா ஸஹஸ்ரஹரிநாமஸமம் ஜஜாப ॥ 13

எதை பார்வதி தேவி தன் பர்த்தாவுடன்கூட சேர்ந்து அனுபவிக்க விரும்பி ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்குச் சமமாக மிகப் பிரியத்துடன் ஜபித்து வந்தாளோ, அப்படிப் பட்டதும், எல்லாவித பாபங்களையும் போக்கடித்து வாக்கில் உள்ள ஸமஸ்த தோஷங்களையும் அபஹரிக்கக்கூடியதுமான ஸ்ரீரகுநாத நாமாவைக் காலைவேளையில் சொல்லுகிறேன்.

[ஸ்ரீபார்வதி விஷ்ணுஸஹஸ்ரநாமத்தை ஜபித்து வந்தாள். ஸ்ரீ பரமேச்வரன் சுருக்கமாக ஸ்ரீ ராமநாமாவை ஜபித்து வந்தார். இருவரும் ஒரே ராமநாமஜபசுகத்தை அநுபவிக்க வேண்டுமெனக்கருதி ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமத்திற்குச் சமமான ஸ்ரீராம நாமத்தையே ஸ்ரீபார்வதிதேவியும் ஸ்ரீபரமேச் வர உபதேசம் பெற்று ஜபிக்கத் தொடங்கினாள்.

ஸ்ரீராமராம ராமேதி ரமேராமே மநோரமே ।
ஸஹஸ்ரநாம தத்துல்யம் ராமநாம வராநநே ॥

என்பது ஸ்ரீ பரமேச்வரனுடைய உபதேசம்.] (13

प्रातः श्रये श्रुतिनुतां रघुनाथमूर्तिं
नीलाम्बुदोत्पलसितेतररत्ननीलाम् ।
आमुक्तमौक्तिकविशेषविभूषणाढ्यां
ध्येयां समस्तमुनिभिः निजभृत्यमुख्यैः ॥ 14

ப்ராத: ச்1ரயே ச்1ருதிநுதாம் ரகுநாத2 மூர்த்திம்
நீலாம்பு3தோ3த்பலஸிதேதரரத்நநீலாம் |
ஆமுக்தமௌக்திகவிசேஷவிபூ4ஷணாட்4யாம்
த்4யேயாம் ஸமஸ்தமுநிபி4: நிஜப்4ருத்யமுக்2யை:||

வேதங்களால் பொற்றப்பட்டதும், நீருண்டமேகம் நீலோத்பலம், இந்திர நீலமணி இவைபோல் கருத்த மேனியை உடையதும், சிறந்த முத்துக்கள் இழைக்கப்பட்ட ஆபரணத்தால் அலங்கரிக்கப்பெற்றதும், தனது தாஸர்களுள் முக்கியஸ்தர்களான எல்லா முனிவர்களாலும் தியானம் செய்யப்பட்டதுமான ஸ்ரீஇரகுநாதனுடைய மூர்த்தியை (உடலை) ஆச்ரயிக்கிறேன். (14)

यः श्लोकपञ्चकमिदं नियतः पठेत
नित्यं प्रभातसमये पुरुषः प्रबुद्धः ।
श्रीरामकिङ्करजनेषु स एव मुख्यो
भूत्वा प्रयाति हरिलोकमनन्यलभ्यम् ॥ 15

ய: ச்1லோபஞ்சகமித3ம் நியத: படே2த
நித்யம் ப்ரப4ாதஸமயே புருஷ: ப்ரபுத்3த4: |
ஸ்ரீராமகிங்கரஜநேஷு ஸ ஏவ முக்2யோ
பூ4த்வா ப்ரயாதி ஹரிலோகமநந்யலப்4யம் ||

பிரதிதினம் காலையில் எழுந்திருந்தவுடன் எவன் தவருமல் இந்த ஐந்து சுலோகங்களையும் படித்து வருகின்ருனே அவனே ஸ்ரீராமருடைய பக்தர்களுள் முதல்வஞகி மற்றவர்களால் பெறமுடியாத ஸ்ரீ விஷ்ணுலோகத்தை அடைவான். (15)

[ஸ்ரீராமருடைய முகம், கை, கால், நாமம், உடல் இந்த ஐந்தையும் வர்ணிக்கும் இந்த ஐந்து சுலோகங்களும் காலையில் ஜபிக்க வேண்டு மெனக் கூறப்பட்டுள்ளதால் இதற்கு "**ப்ராத:ஸ்மரணீய பஞ்சகம்**" எனப் பெயரிடப்பட்டிருக்கிறது.]

---

**ஏகச்லோக ராமாயணம்**

आदौ रामतपोवनानुगमनं मायामृगच्छेदनं
वैदेहीहरणं जटायुमरणं सुग्रीवसंभाषणम् ।
वालीनिग्रहणं समुद्रतरणं लङ्कापुरीदाहनं
पश्चाद्रावणकुम्भकर्णनिधनं चैतद्धि रामायणम् ॥ 16

ஆதெ$^3$ள ராமதபோவநாநுக$^3$மநம்
மாயாம்ருக$^3$ச்சே$^2$த$^3$நம்
வைதே$^3$ஹீஹரணம் ஜடாயுமரணம்
ஸுக்$^3$ரீவஸம்ப$^4$ாஷணம் |
வாலீநிக்$^3$ரஹணம் ஸமுத்ரதரணம்
லங்காபுரீத$^3$ாஹநம்
ப:சாத் ராவணகும்ப$^4$ கர்ணநித$^4$நம்
சைதத்$^3$தி$^4$ ராமாயணம் || 16

முதலில் ஸ்ரீராமர் தபோவனத்திற்குச் செல்லுதல், பிறகு பொன்மான் வேஷம் பூண்ட மாரீசனைக் கொல்லுதல், ஸீதையை இராவணன் தூக்கிச் செல்லுதல், ஜடாயுவின் மரணம், சுக்ரீவனுடன் ஸக்கியம் செய்துகொள்ளுதல், வாலியைக் கொல்லுதல், ஸமுத்ரத்தை ஹனுமான் தாண்டிச் செல்லுதல், இலங்கையைக் கொளுத்துதல். பிறகு இராவணன் கும்பகர்ணன் முதலியவர்களைக் கொல்லுதல் (ஸ்ரீராம பட்டாபிஷேகம்) இதுவே ஸ்ரீமத் ராமாயணம். (16)

அடியிற்கண்ட சுலோகங்கள் ஸ்ரீராமபத்ர தீக்ஷிதர் அவர்களால் இயற்றப்பட்ட "ஸ்ரீராமாஷ்டப்ராஸம்" என்ற நூலிலிருந்து எடுக்கப்பட்டவை.

---

कर्ता कञ्जभवात्मना त्रिजगतां भर्ता मुकुन्दात्मना
हर्ता यश्च हरात्मनाघमखिलं स्मर्ता च यस्योज्झति ।
धर्तारं धनुषः शरैस्सह तमादर्तारमार्तान्वयं
सर्तारोप्पथे श्रिता रघुपतिं वर्तामहे निर्भयाः ॥ 1

கர்த்தா கஞ்ஜப4வாத்மநா த்ரிஜகதாம்
ப்4ர்த்தா முகுந்த3ாத்மநா
ஹர்த்தா ய:ச ஹராத்மநாக4மகி2லம்
ஸ்மர்த்தாச யஸ்யோஜ்ஜ4தி ।
த4ர்த்தாரம் த4நுஷ: ச1ரைஸ்ஸஹ
தமாத3ர்த்தாரமார்த்தாந்வயம்
ஸர்த்தாரோப்யபதே2 ச்1ரிதா
ரகு4பதிம் வர்த்தாமஹே நிர்ப்4யா: ॥ 1

(இ-ள்) எவர் பிருஹ்மதேவனுக இருந்து மூவுலகங்களையும் சிருஷ்டிக்கின்ருரோ, விஷ்ணுவாக இருந்து எல்லா உலகங்களையும் இரக்ஷிக்கின்ருரோ, பரமேச்வரனுக இருந்து மூவுலகங்களையுமழிக்கின்ருரோ, எவரை ஸ்மரிப்பவர் எல்லா பாவங்களையும் துறந்துவிடுகின்றனரோ, எவர், கையில் அம்புகளுடன் வில்லை தரித்துக்கொண்டு, கஷ்டப்படுகின்றவர்களையெல்லாம் இரக்ஷிக்கின்ருரோ, அத்தகைய இரகுபதியை அண்டி, முன்பு ஒருக்கால் துர்மார்க்கத்தில் சென்றிருந்தபோதிலும் இப்பொழுது ஸ்ரீ ராமனை அண்டிய காரணத்தால் பயமற்றவர்களாக இருக்கின்ருேம்.

ஒரு காலத்தில் கெட்டவழியில் சென்றவர்கள்கூட இராமனை அண்டினால் பாவம் விலகி பயமற்றவர்களாக ஆகிவிடலாம் என்றும், சிருஷ்டி, ஸ்திதி முதலிய காரியங்களுக்கேற்றபடி கடவுளுடைய பெயர் மாறினாலும் தத்துவம் ஒன்றுதான் என்ற உண்மையையும் இதில் எடுத்துக் காட்டியுள்ளார்.

कारागारसमानसंसृतिनिराकाराय सच्चिन्मयं
धीरा यं शरणं व्रजन्ति भुवने नीरागमोहस्मयाः ।
तारादेवरमुख्यवानरपरीवाराय नीराकर-
स्फाराटोपहराय रावणजिते वीराय तस्मै नमः ॥ 2

காராக[3]ாரஸமாநஸம்ஸ்ருதி
நிராகாராய ஸச்சிந்மயம்
தீ[4]ரா யம் ச[1]ரணம் வ்ரஜந்தி
பு[4]வநே நீராக[3]மோஹஸ்மயா: ।
தாராதே[3]வரமுக்[2]ய வாநர
பரீவாராய நீராகர–
ஸ்ப[2]ாராடோபஹராய
ராவணஜிதே வீராய தஸ்மை நம: ॥ 2

(இ-ள்) சிறைக்கொப்பான ஸம்ஸாரத்தை ஒழிப்பதன் பொருட்டு, இவ்வுலகில் ஆசை, மோஹம், கர்வம் முதலிய தீயகுணங்கள் அற்ற பக்தர்கள் ஸத்ரூபமாயும் சித்ரூபமாயுமுள்ள எவரை சரணமடைகின்றனரோ, அத்தகைய, சுக்ரீவன் முதலிய வாநரர்களால் சூழப்பட்டவரும், சமுத்திரத்தின் கொட்டத்தைக் கொலைத்தரும், இராவணனை வென்றவருமான வீரருக்கு நமஸ்காரம்.

किं देवैरितरैः प्रपन्नभरणे संदेहकृद्भिर्नृणां
विन्देयं यदि तान् विमूढ इति मां निन्देयुरार्या न किम् ?।

किं देयं किमदेयमित्यविदुरं तं देहिनामिष्टदं
वन्दे कञ्चन वञ्चनामृगरिपुं मन्देतरश्रेयसे ॥ 3

கிம் தை3வைரிதரை: ப்ரபந்நப4ரணே
ஸந்தே3ஹக்ருத்3பி4ர் ந்ருணாம்
விந்தே3யம் யதி3 தாந் விமூட4 இதிமாம்
நிந்தே3யுரார்யா ந கிம்? ।
கிம் தே3யம் கிமதே3ய மித்யவிது3ரம்
தம் தே3ஹிநாமிஷ்டத3ம்
வந்தே கஞ்சந வஞ்சநாம்ருக3ரிபும்
மந்தே3தரச்1ரேயஸே ॥ 3

(இ-ள்) அண்டியவர்களை இரக்ஷிக்கும் விஷயத்தில் சந்தேகங்கொண்ட மற்ற தேவர்களால் என்ன பயன்? அவர்களை நான் அண்டினால் பெரியோர்கள் என்னை "மூடன்" என்று தூற்றமாட்டார்களா? அண்டியவர்களுக்கு "எதைக்கொடுக்கலாம், எதைக்கொடுக்கக்கூடாது" என்றுகூட அறியாதவராய் வேண்டியதையெல்லாம் வாரி வழங்குபவரும், மாயா மானுக்கு விரோதியுமான ஒருவரை (ஸ்ரீராமரை) மஹத்தான சிரேயஸ்ஸை (மோக்ஷத்தை) அடைவதன்பொருட்டு வணங்குகிறேன்.

சரணமென்று அடைந்தவர்களின் குற்றங் குறைகளை கவனிக்காமல் எல்லாவற்றையும் அளிக்கும் வள்ளல் ஸ்ரீராமர்.

गात्रेषु श्रममग्निमान्द्यमुदरे नेत्रे जडत्वं सह
श्रोत्रेणादिशती जरा विशति चेत् कोऽत्रेरयेन्मास्त्विति ।
दात्रे यत्तु नमोऽधुनाऽपि कलये स्तोत्रेण वित्ताशया
मैत्रे जन्मजुषे कुले कृतनतिर्नेत्रे तदुज्झाम्यहम् ॥ 4

கா3த்ரேஷு ச்1ரமமக்3நிமாந்த்3யமுத3ரே
நேத்ரே ஜட3த்வம் ஸஹ
ச்1ரோத்ரேணாதி3ச1தீ ஜரா விச1திசேத்
கோத்ரேரயேந்மாஸ்த்விதி ।
தா3த்ரே யத்து நமோது4நாபி கலயே
ஸ்தோத்ரேண வித்தாச1யா
மைத்ரே ஜந்மஜுஷே குலே க்ருதநதிர்
நேத்ரே தது3ஜ்சா4ம்யஹம் ॥ 4

(இ-ள்) உறுப்புக்களில் களைப்பு, வயிற்றில் அஜீர்ணம், கண்களில் பார்வை குன்றல், காதுகளில் கேட்கும் திறமையில்லாமை, இவை யெல்லாவற்றையும் அளிக்கும் கிழத்தன்மை உடலில் புகுந்தால் "வேண்டாம், உடலில் பிரவேசிக்காதே" என்று யார் கூறமுடியும்? ஆனால் இந்த சமயத்தில்கூட ஒரு கொடையாளியைக்கண்டால் பணத்தில் உள்ள ஆசையால் அவனைத்துதித்து வணக்கத்தையும் தெரிவிக்கிறேன். அந்தோ! இனியாவது சூரிய குலத்தில் தோன்றிய ஜகந்நாயகனை ஸ்ரீராமனை வணங்கி மனிதனை வணங்கும் தொழிலை ஒழித்துவிடுகிறேன்.

जातो यो मिहिरान्वये नियमिना नीतो मखं रक्षितुं
शातोदर्यपि येन गौतममुनेः पूतोपलत्वं जहौ ।
छातोमापतिकार्मुकं सदसि यं सीतोपलेभे पतिं
नातो राघवतोऽपरं शरणमित्यातोद्यमाघोषये ॥ 5

ஜாதோ யோ மிஹிராந்வயே நியமிநா
நீதோ மக2ம் ரக்ஷிதும்
சா1தோத3ர்யபி யேந கௌ3தமமுநே:
பூதோபலத்வம் ஜஹௌ ।

ச²ாதோமாபதிகார்முகம் ஸத³ஸி யம்
ஸீதோபலேபே⁴ பதிம்
நாதோ ராக⁴வதோऽபரம் ச¹ரண
மித்யாதோத்³யமாகே⁴ாஷயே || 5

(இ-ள்) எவர் சூரிய வம்சத்தில் தோன்றி, விச்வாமித்ர முனிவரால் யாகத்தை இரக்ஷிப்பதற்காக அழைத்துச் செல்லப்பட்டாரோ, எவரால் கௌதம முனிவருடைய மனைவி புநிதையாகிக் கல்லாக இருத்தலை இழந்தாளோ, ஜநகன் ஸதஸ்ஸில் சிவதனுஸ்ஸை முறித்த எவரை சீதாப் பிராட்டி கணவனாக அடைந்தாளோ, அத்தகைய இராகவனைக்காட்டிலும் வேறு யாரும் எனக்குச் சரணமாக இல்லை என பேரீவாத்யத்தை முழங்குகிறேன்.

नाहं पुत्रकलत्रमित्रविषये स्नेहं विहातुं क्षमः
साहङ्कारमिदं मनश्च न कृतोत्साहं गुरूपासने ।
देहं नश्वरमन्तकस्य न दया हा हन्त तेनोज्झितुं
मोहं नौमि रुचा विडम्बितपयोवाहं रघूणां पतिम् ॥

நாஹம் புத்ரகலத்ரமித்ரவிஷயே
ஸ்நேஹம் விஹாதும் க்ஷம:
ஸாஹங்காரமித³ம் மந:ச நக்ருதோத்
ஸாஹம் கு³ரூபாஸநே |
தே³ஹம் நச்¹வரமந்தகஸ்ய ந த³யா
ஹா ஹந்த தேநோஜ்ஜி⁴தும்
மோஹம் நௌமி ருசா விட³ம்பித
பயோவாஹம் ரகூ⁴ணாம் பதிம் || 6

(இ-ள்) புத்ர, மித்ர, களத்ராதிகளிடம் பற்றை ஒழிக்க என்னால் முடியவில்லை. கர்வங்கொண்ட என் மனமும் குருவை அண்டி அவர் பாதம் பணிந்து நல்ல விஷயங்களை அறிந்துகொள்ள விரும்பவில்லை. உடலோ நிலையற்றது.

யமனுக்கோ யாரிடமும் தயவில்லே. அந்தோ! என்ன செய்வேன்! என்னுடைய இந்த மோஹம்தீர மேகம் போன்ற தேககாந்தியையுடைய ரகுபதியையே வணங்குகிறேன்.

श्रीहीनं व्यथयन्ति ये धनमदादेहीति याहीति तान्
वाहीकानिव न स्मराम्यपि पतीन् दोहीयसीनां गवाम् ।
देहीतीरितमन्तरेण ददते यो हीहितं देहिनां
पाहीति ब्रुवतो रघूद्वह दयावाही स सेव्योऽसि मे ॥ 7

ஸ்ரீஹீநம் வ்யத2யந்தி யே த4நமத3ா
தே3ஹீதி யாஹீதி தாந்
வாஹீகாநிவ நஸ்மராம்யபி
பதீந் தே3ாஹீயஸீநாம் க3வாம் |
தேஹீதீரிதமந்தரேண த3த3தே
யோஹீஹிதம் தே3ஹிநாம்
பாஹீதி ப்3ருவதோ ரகூ4த்3வஹ
த3யாவாஹீ ஸ ஸேவ்யோஸி மே || 7

(இ-ள்) நன்ருகக் கறக்கும் பசு முதலிய பொருள்களை யுடைய பணக்காரர்கள் பணத்திமிரால் "நாளை வா" "இன்று போ" என்றெல்லாம் கூறி ஏழைகளைத் துன்புறுத்துகின்றனர். நாஸ்திகர்களுக்கொப்பான அவர்களை ஒரு பொழுதும் மனதினுல்கூட நான் நினைக்கமாட்டேன். "கொடு" என்று கேட்காமலே பிராணிகளுக்கு வேண்டியவற்றை யெல்லாம் வாரி வழங்கும் ஹே! ரகுபதே! "இரக்ஷிக்க வேண்டும்" எனக்கூறும் என்னிடம் பூர்ணதயையுள்ள தாங்களே என்னுல் சேவிக்கத் தகுந்தவராக இருக்கின்றீர்.

श्रुत्वा वेदशिरांसि तन्निगदितं मत्वा यथावन्नरः
स्मृत्वाभीक्ष्णमिदं लभेत विशयं हित्वात्मसाक्षात्कृतिम् ।

यत्त्वाह क्रममित्थमागमशिरस्तत्त्वावबोधोदये
सत्त्वाकार तदेव राम सुलभं न त्वामनत्वा नृणाम् ॥ 8

ச்1ருத்வா வேத3சி1ராம்ஸி தந்நிக3தி3தம்
மத்வா யத2ாவந்நர:
ஸ்ம்ருத்வாபீ4க்ஷ்ணமித3ம் லபே4த
விச1யம் ஹித்வாத்மஸாக்ஷாத்க்ருதிம் |
யத்வாஹ க்ரமமித்த2 மாக3மசி1ர
ஸ்தத்வாவபோ3தோ4த3யே
ஸத்வாகார ததே3வ ராம ஸுலப4ம்
ந த்வாமநத்வா ந்ருணாம் || 8

(இ-ள்) மனிதன் முறைப்படி வேதாந்தங்களை சிரவணம் செய்து, அவற்றில் கூறியவற்றை அடிக்கடி மனனம் செய்தும் நிதித்யாஸனம் செய்தும், சந்தேகங்களையெல்லாம் துறந்து ஆத்ம ஸாக்ஷாத்காரத்தை அடையவேண்டும் என்ற முறையை, வேதம் வகுத்துக்கொடுத்திருக்கிறது. ஆனால் ஸத்ரூபமாகப் பிரகாசிக்கும் ஹே! ராம! தங்களை வணங்காமல் மனிதர்களுக்கு மேற்கூறிய ஞானம் ஏற்படுவதென்பது சுலபமல்ல.

[ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு ஸ்ரீராமபக்தி மிகச் சிறந்த ஸாதனம் என்பதாம்.]

हन्तुं प्राक्तनदुष्कृतानि जगतां मन्तुं भृशानित्यतां
कन्तुं जेतुममुत्र चेह समुपारन्तुं फलेष्वादरात् ।
यन्तुं सेन्द्रियजातमागशिरो गन्तुं च वक्त्राद्गुरोः
तन्तुं चण्डकरान्वयस्य कलये तं तुङ्गचापं प्रभुम् ॥ 9

ஹந்தும் ப்ராக்தநது[3]ஷ்க்ருதாநி ஜக[3]தாம்
மந்தும் ப்[4]ருச[1]ாநித்யதாம்
கந்தும் ஜேதுமமுத்ரசேஹ ஸமுபா
ரந்தும் ப[2]லேஷ்வாத[3]ராத் ।
யந்தும் சேந்த்[3]ரியஜாதமாக[3]ம சி[1]ரோ
க[3]ந்தும் ச வக்த்ராத்[3]கு[3]ரோ :
தந்தும் சண்டகராந்வயஸ்ய கலயே
தம் துங்க[4]சாபம் ப்ரபு[4]ம் ॥ 9

(இ-ள்) முன் பிறவிகளில் செய்த பாவங்களை அழிக்கவும், உலகங்கள் முற்றிலும் நிலையற்றவை என்பதை அறிந்து கொள்ளவும். விஷயங்களில் உள்ள ஆசையை ஜயிக்கவும், இஹலோக பரலோக போகங்களில் பற்றை ஒழிக்கவும், புலன்களை அடக்கவும், குருமுகமாக வேதாந்த தத்துவங்களை உணர்ந்துகொள்ளவும், ஸூர்ய வம்சத்தில் தோன்றிய, சிறந்த வில்லாளியான ஸ்ரீராமசந்திர பிரபுவையே தியானம் செய்கிறேன்.

---

सत्यप्रियाय सकलागमसंस्तुताय
सर्वापदां प्रशमनाय सकृत्प्रपत्त्या ।
श्रीरामनामपरिपूतजगत्त्रयाय
सीतासखाय पुरुषाय नमो नमस्ते ॥ 12

ஸத்யப்ரியாய ஸகலாகமஸம்ஸ்துதாய
ஸர்வாபத[4]ாம் ப்ரச[1]மநாய ஸக்ருத்ப்ரபத்த்யா ।
ஸ்ரீராமநாமபரிபூதஜகத்ரயாய
ஸீதாஸக[2]ாய புருஷாய நமோ நமஸ்தே ॥ 12

—(ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதர்.)

(இ-ள்) ஸத்தியத்தில் பிரியமுள்ளவரும், எல்லா வேதங்களிலும் கொண்டாடப்பட்டவரும், ஒரு தடவை பிரபத்தி செய்ததாலேயே எல்லா துன்பங்களையும் அழிக்கவல்லவரும் "ஸ்ரீராம" என்ற தன் பெயரால் மூவுலகங்களையும் புனிதமாக்கியவரும், ஸீதாஸமேதருமான புருஷோத்தமரான தங்களுக்கு நமஸ்காரம்.

---

अस्त्रामास तृणं प्रियाद्रुहि तृणामास स्मरारेर्धनुः
दारामास मुनेश्शिलाऽपि नृवरामास स्वयं पादुका ।
कुल्यमास महार्णवोऽपि कपयो योधांबभूवुस्तदा
पौलस्त्यो मशकांबभूव भगवंस्त्वं मानुषामासिथ ॥ 13

அஸ்த்ராமாஸ த்ருணம் ப்ரியாத்3ருஹி
த்ருணுமாஸ ஸ்மராரேர்த4நு:
த3ாராமாஸ முநே: சி1லாபி ந்ருவராமாஸ
ஸ்வயம் பாது3கா |
குல்யாமாஸ மஹார்ணவோபி கபயோ
யோத4ாம்ப3பூ4வுஸ்தத3ா
பௌலஸ்த்யோ மச1காம்ப3பூவ ப4க3வந்
த்வம் மாநுஷாமாஸித2 || 13

— (ஸ்ரீவேங்கடாத்வரி.)

(இ-ள்) ஹே! பிரபோ! தாங்கள் மனிதனாக (இராமனாக) தோன்றியதும், தங்கள் மனைவிக்கு துரோகம் செய்த காகாசுரனிடம் ஒரு புல் அஸ்திரமாக மாறியது. பரமேச்வரனுடைய வில் புல்போல் (தங்களுக்கு) மிக இலேசாக ஆயிற்று. ஒரு கல்லும் (தங்கள் பாத ஸ்பரிசத்தால்) கௌதம முனிவருக்கு மனைவியாக மாறிற்று. தங்கள் பாதுகை தானே அரசனாக ஆட்சி புரிந்தது. விசாலமான

கடலும் (தங்களுக்கு) வாய்க்காலுக்கு ஒப்பாயிற்று. குரங்குகள் எல்லாம் (தங்களுக்கு) போர்வீரர்கள் ஆனார்கள். மூவுலகங்களையும் வென்ற மகா வீரனான இராவணன் (தங்களிடம்) ஒரு கொசுபோல் ஆனான். என்ன விந்தை!!

ஶ்ரீராமநாமாவின் பெருமை

कल्याणानां निदानं कलिमलमथनं पावनं पावनानां
पाथेयं यन्मुमुक्षोः सपदि परपदप्राप्तये प्रस्थितस्य।
विश्रामस्थानमेकं कविवरवचसां जीवनं सज्जनानां
बीजं धर्मद्रुमाणां प्रभवतु भवतां भूतये रामनाम ॥ 14

கல்யாணாநாம் நித$^{3}$ாநம் கலிமலமத$^{2}$நம்
பாவநம் பாவநாநாம்
பாதே$^{2}$யம் யந்முமுக்ஷோஸ்ஸபதி$^{3}$ பரபத$^{3}$
ப்ராப்தயே ப்ரஸ்தி$^{2}$தஸ்ய।
விச்$^{1}$ராமஸ்த$^{2}$ாநமேகம் கவிவரவசஸாம்
ஜீவநம் ஸஜ்ஜநாநாம்
பீ$^{3}$ஜம் த$^{4}$ர்மத்$^{3}$ருமாணாம் ப்ரப$^{4}$வது
ப$^{4}$வதாம் பூ$^{4}$தயே ராமநாம ॥ 14

(இ-ள்) மங்களங்களுக்கெல்லாம் இருப்பிடம். கலி தோஷங்களை அழிக்கவல்லது. புநித வஸ்துக்களுள் புநிதமானது. உத்தம கதியை அடைய விரும்பி புறப்பட்ட மோக்ஷகாமனுக்கு வழியில் புசிக்கத்தகுந்த உணவு. கவிகளின் அரிய மொழிகள் எல்லாம் வந்து சேருமிடம். சாதுக்களின் வாழ்க்கைத் துணை. தர்மமாகிற தருக்களின் விதை. இத்தகைய ஶ்ரீராமநாமம் உங்கள் எல்லோருக்கும் நன்மையையளிக்கட்டும்,

गुर्वर्थे त्यक्तराज्यो व्यचरदनुवनं पद्मपद्भ्यां प्रियायाः
पाणिस्पर्शाक्षमाभ्यां मृजितपथरुजो यो हरीन्द्रानुजाभ्याम्।

वैरूप्याच्छूर्पणख्याः प्रियविरहरुषा रोपितभ्रूविजृम्भ-
त्रस्ताब्धिर्बद्धसेतुः खलदवदहनः कोसलेन्द्रोऽवतान्नः ॥ 15

கு[3]ர்வர்த்தே[2] தயக்தராஜ்யோ வ்யசரத[3]நுவநம்
பத்[3]மபத்[3]ப்[4]யாம் ப்ரியாயா:
பாணிஸ்பர்ச[1]ாக்ஷமாப்[4]யாம் ம்ருஜிதபத[2]ருஜோ
யோ ஹரீந்த[3]ராநுஜாப்[4]யாம்|
வைரூப்யாச்சூ[2]ர்பணக்[2]யா: ப்ரியவிரஹருஷா
ரோபித ப்[4]ரூவிஜ்ரும்ப[4]—
த்ரஸ்தாப்[3]தி[4]ர்ப[3]த்[3]த[4] ஸேது: க[2]லத[3]வத[3]
ஹந: கோஸலேந்த்[3]ரோऽ வதாந்ந:|| 15

—(ஸ்ரீமத் பாகவதம் 9, 10, 4)

(இ·ள்) எவர், பித்ருவாக்ய பரிபாலனத்திற்காக அரசைத் துறந்து, ஜானகியின் மிருதுவான கரஸ்பரிசத்தைக்கூட பொறுக்காத தாமரைபோன்ற பாதங்களால் காட்டிற்கு நடந்து சென்ருரோ, எவர் ஆஞ்சநேயன் லக்ஷமணன் இவர்களுடன்கூட சென்றதால் வழியில் கொஞ்சம்கூட களைப்பை உணரவில்லையோ, காமவெறிகொண்ட சூர்ப்பணகையின் மூக்கையும், காதையும் அறுத்ததால் (சினங்கொண்ட இராவணனுல் சீதை அபகரிக்கப்பட) அந்த விரஹத்தால் கோபங்கொண்ட எந்த வீரனுடைய புருவங்கள் நெரிந்ததால் சமுத்திரத்தில் அணை கட்டப்பட்டதோ, எவர் இராவணன், கும்பகர்ணன் முதலிய துஷ்டர்களாகிற காட்டைத் தீபோல் (அழித்தாரோ) அத்தகைய கோஸல தேசத்து மன்னனுன ஸ்ரீராமசந்திரன் நம்மைக் காத்தருளவேண்டும்.

यस्यामलं नृपसदस्सु यशोऽधुनाऽपि
गायन्त्यघघ्नमृषयो दिगिभेन्द्रपट्टम् ।
तं नाकपालवसुपालकिरीटजुष्ट-
पादाम्बुजं रघुपतिं शरणं प्रपद्ये ॥ 16

யஸ்யாமலம் ந்ருபஸதஸ்ஸு
யசே[1]ாது[4]நாபி
க[3]ாயந்த்யக[4]க்[4]நம்ருஷயோ
தி[3]கி[3]பே[4]ந்த்[3]ரபட்டம்।
தம் நாகபால வஸு
பாலகிரீட ஜுஷ்ட-
பாத[3]ாம்பு[3]ஜம் ரகு[4]பதிம்
ச[1]ரணம் பரபத்[3]யே॥ 16

(பாக. 9, 11, 21)

(இ·ள்) எல்லா திக்குகளிலும்வியாபித்ததும், பாவங்களை அழிக்கின்றதுமான, எவருடைய புநிதமான புகழைப்பற்றி இப்பொழுதுகூட அரசசபைகளில் முனிவர்கள் பாடிக் கொண்டிருக்கின்றனரோ, எவருடைய சரணாரவிந்தங்களில் தம் கீரீடம் படும்படி தேவர்களும் இப்புவியில் உள்ள மன்னர்களும் சேவித்து வந்தனரோ, அத்தகைய ரகுபதியை நான் சரணமாக அடைகின்றேன்.

नमस्ते सुमित्रासुपुत्राभिवन्द्य
नमस्ते सदा कैकयीनन्दनेड्य ।
नमस्ते सदा वानराधीशवन्द्य
नमस्ते नमस्ते सदा रामचन्द्र ॥ 17

நமஸ்தே ஸுமித்ரா ஸுபுத்ரா பி[4]வந்த்[3]ய
நமஸ்தே ஸத[3]ா கைகயீநந்த[3]நேட்[3]ய।
நமஸ்தேஸத[3]ா வாநராதீ[4]ச[1] வந்த்[3]ய
நமஸ்தே நமஸ்தே ஸத[3]ா ராமசந்த்[3]ர॥ 17

(இ·ள்) ஸுமித்ரா சுகுமாரனும் லக்ஷ்மணனால் வணங்கப் படுகின்றவரே! தங்களுக்கு வணக்கம். கைகயீபுதல்வனை

பரதனால் போற்றப்படுகின்றவரே! தங்களுக்கு வணக்கம் வானரத் தலைவர்களால் வணங்கப்பெற்றவரே! தங்களுக்கு வணக்கம். ஹே! ராமச்சந்த்ர! எப்பொழுதும் தங்களுக்கு வணக்கம்!

भवकोदण्डदलनं भवबन्धविमोचनम् ।
दशकण्ठरिपुं वन्दे दशस्यन्दननन्दनम् ॥

பவகோதண்டத$^3$லநம் ப$^4$வப$^3$ந்த$^4$
விமோசநம் |
த$^3$ச$^1$கண்ட$^2$ரி$^4$ம் வந்தே$^3$ த$^3$ச$^1$ஸ்யந்த்$^3$ந
நந்த$^3$நம் ||

சிவனது வில்லை முறித்தவரும், ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுவிப்பவரும், பத்துதலையுள்ள இராவணனைக் கொன்றவரும் பத்து திக்குகளிலும் தேரைச் செலுத்திய தசரதருடைய புதல்வருமான ஸ்ரீராமசந்திரனை வணங்குகிறேன்.

श्रीरामचन्द्रः श्रितपारिजातः समस्तकल्याणगुणाभिरामः ।
सीतामुखाम्भोरुहचञ्चरीकः निरन्तरं मङ्गळमातनोतु ॥

ஸ்ரீராமசந்த்$^3$ர: ச்$^1$ரிதபாரிஜாத:
ஸமஸ்த கல்யாணகுணாபிராம:
ஸீதாமுகாம் போருஹசஞ்ரீக:
நிரந்தரம் மங்களமாதநோது ||

அண்டியவர்களுக்கு பாரிஜாதம் என்ற விருக்ஷம்போல் அபீஷ்டங்களையெல்லாம் அளிப்பவரும். எல்லாவித கல்யாண குணங்களும் நிறம்பி இருப்பதால் எல்லோருடைய மனதையும் கவருகின்றவரும், ஸீதையின் முகமாகிற தாமரையில் வண்டு போன்றவருமான ஸ்ரீ ராமசந்திரன் எப்பொழுதும் மங்களங்களை உண்டுபண்ணட்டும்.

---

# हनूमत्पञ्चरत्नम् ॥

## ஹநுமத் பஞ்சரத்னம்.

वीताखिलविषयेच्छं जातानन्दाश्रुपुलकमत्यच्छम् ।
सीतापतिदूताद्यं वातात्मजमद्य भावये हृद्यम् ॥ 1

வீதாகி2லவிஷயேச்ச2ம்
ஜாதாநந்த3ாச்ருபுலகமத்யச்ச2ம் ।
ஸீதாபதி தூ3தாத்யம்
வாதாத்மஜமத்3ய ப4ாவயே ஹ்ருத்3யம் ॥

ஸமஸ்த விஷயங்களிலும் ஆசையை ஒழித்தவரும், ஆனந்த பாஷ்பத்தால் புளகாங்கிதமான சரீரத்தையுடையவரும், தூயமனம் படைத்தவரும், இராம தூதர்களுள் முதல் ஸ்தானத்தை வகிப்பவரும், மனோஹரருமான, வாயு குமாரனும் ஆஞ்சனேயனை இப்பொழுது தியானம் செய்கின்றேன். 1

तरुणारुणमुखकमलं करुणारसपूरपूरितापाङ्गम् ।
संजीवनमाशासे मञ्जुलमहिमानमञ्जनाभाग्यम् ॥ 2

தருணாருணமுக2கமலம்
கருணாரஸபூரபூரிதாபாங்க3ம் ।
ஸஞ்ஜீவநமாச1ாஸே
மஞ்ஜுலமஹிமாநமஞ்ஜநாப4ாக்3யம் ॥

தாமரைபோல் சிவந்த முகத்தைப் பெற்றவரும், கருணா ரஸப் பிரவாஹம் நிரம்பிய கடைக்கண் பார்வையை உடையவரும், ரமணீயமான மஹிமைகளுடன் கூடியவருமான, அஞ்சனாதேவியின் பாக்கிய விசேஷத்தால் தோன்றிய ஆஞ்சநேயனை, எனக்கு நீண்ட ஆயுளை அளித்து, ஆயுள் வரை துணைவனாகவும் இருக்கவேண்டுமென வேண்டிக் கொள்கிறேன். (ஆஞ்சனேயனைத் துதித்தால் ஆயுள் வளரும்) 2

शम्बरवैरिशरातिगमम्बुजदलविपुललोचनोदारम्।
कम्बुगलमनिलदिष्टं बिम्बज्वलितोष्ठमेकमवलम्बे ॥ 3

சம்ப$^{3}$ர வைரிசராதிக$^{3}$ம்

அபு$^{3}$ஜத$^{3}$லவிபுலலோசநோத$^{3}$ாரம்।

கம்பு$^{3}$க$^{3}$லமநிலதி$^{3}$ஷ்டம்

பி$^{3}$ம்ப$^{3}$ஜ்வலிதோஷ்ட$^{2}$மேகமவலம்பே ॥ 3

மன்மத பாணத்திற்கு உட்படாதவரும், தாமரை இதழ் போல் விலாசமான நேத்ரங்களை உடையவரும், சங்கம் போன்ற கழுத்துடனும், கோவைப்பழம்போல் ஜ்வலிக்கின்ற உதடுகளுடனும், கூடிய வாயுவின் பாக்கிய விசேஷமான ஒருவரை ஆச்ரயிக்கின்றேன். 3

दूरीकृतसीतार्तिः प्रकटीकृतरामवैभवस्फूर्तिः।
दारितदशमुखकीर्तिः पुरतो मम भातु हनुमतो मूर्तिः॥ 4

தூரீக்ருதஸீதார்த்தி:

ப்ரகடீக்ருத ராமவை$^{4}$வஸ்பூர்த்தி:।

தா$^{3}$ரித த$^{3}$சமுக$^{2}$கீர்த்தி:

புரதோ மம ப$^{4}$ாது ஹநுமதோ மூர்த்தி: ॥ 4

சீதாப்பிராட்டியின் துன்பங்களை தூரத்தில் அகற்றியதும், ஸ்ரீராமனுடைய வைபவத்தை எங்கும் பரவச் செய்ததும், (பத்துதலை) இராவணனுடைய புகழைப் பிளந்து தள்ளியதுமான, ஹனுமானுடைய மூர்த்தி, என் முன்னிலையில் பிரகாசித்துக்கொண்டே இருக்கட்டும். 4

वानरनिकराध्यक्षं दानवकुलकुमुदरविकरसदृक्षम् ।
दीननजनावनदीक्षं पवनतपःपाकपुञ्जमद्राक्षम् ॥ 5

வானரநிகராத்[4]யக்ஷம்
 தானவகுலகுமுதரவிகரஸத்[3]ருக்ஷம் ।
தீ[3]நஜநாவனதீ[3]க்ஷம்
 பவநதப:பாகபுஞ்ஜமத்ராக்ஷம் ॥ 5

வானர சேனைக்குத் தலைவரும், அசுரக் கூட்டங்களாகிற ஆம்பல் புஷ்பங்களுக்கு சூரிய ஒளி போன்றவரும், (சூரிய ஒளியில் ஆம்பல் புஷ்பங்கள் சுருங்கிவிடும்.) தீனர்களை இரக்ஷிப்பதில் தீக்ஷை பெற்றவரும், வாயுவினது தவத்தின் பயன்கள் எல்லாம் ஒன்றுசேர்ந்து உருவெடுத்தவருமான ஆஞ்சநேயனைக்கண்டேன். 5

एतत् पवनसुतस्य स्तोत्रं यः पठति पञ्चरत्नाख्यम् ।
चिरमिह निखिलान् भोगान् भुक्त्वा श्रीरामभक्तिमाक् भवति ॥

ஏதத் பவநஸுதஸ்ய
 ஸ்தோத்ரம் ய: பட[2]தி பஞ்சரத்நாக்[2]யம் ।
சிரமிஹ நிகி[2]லாந் பே[4]ாக[3]ாந்
 பு[4]க்த்வா ஸ்ரீராம[4]பக்திப[4]க்தி ப[4]வதி ॥

வாயுகுமாரனது "பஞ்சரத்னம்" என்ற இந்த ஸ்தோத்திரத்தை எவனொருவன் படிக்கின்றானோ, அவன் இந்த லோகத்தில் வெகுநாள் வரை எல்லா போகங்களையும் அநுபவித்து ஸ்ரீராம பத்தியைப் பெற்றவனாக ஆகின்றான்.

---

# हनूमद्दण्डकम् ॥

# ஹநூமத் தண்டகம்

1 जय विभो ! शतयोजनविस्तीर्णलवणार्णवलङ्घनजङ्घाल !

ஜய விபே4ா ! சதயோஜநவிஸ்தீர்ண
லவணார்ணவலங்க4நஜங்க4ால

நூறு யோஜனை தூரமுள்ள லவண ஸமுத்திரத்தைத் தாண்டுவதில் மிக வேகத்துடன் கூடிய ஹே ! பிரபோ ! தாங்கள் எல்லாவற்றிலும் மேன்மையுடன் விளங்குவீராக.

जय अञ्जनाबाल !

ஜய அஞ்ஜநா ப3ால

அஞ்ஜநா தேவிக்கு பாலகனாகத் தோன்றியவரே ! தாங்கள் மேன்மையுடன் விளங்குவீராக !

2 सुरसावदनान्तरालप्रवेशनिर्गमस्फुरीकृतप्रभाव !

ஸுரஸாவத3நாந்தராலப்ரவேசநிர்க3மஸ்பு2டீ
க்ருதப்ரப4ாவ !

"ஸுரஸை" என்ற நாகமாதாவின் வாயில் புகுந்து உடனே வெளியில் வந்ததால் தங்கள் மஹிமையை நன்கு வெளியிட்டவரே !

अनितरसुलभानुभाव !

அநிதரஸுலப4ாநுப4ாவ !

மற்றவர்களிடம் காணமுடியாத தனிப் பெருமைகளையுடையவரே !

3 महोदधिमध्याविर्भूतमैनाकमहीधरमहीकृत !

மஹோத3தி4மத்4யாவிர்பூ4த மைநாகமஹீத4ர
மஹீக்ருத !

சமுத்திரத்தின் நடுவில் தோன்றிய "மைநாகம்" என்ற மலையால் கௌரவிக்கப்பட்டவரே !

संतोषविवशसागराद्दत !

ஸந்தோஷ விவச1ஸாக3ராத்3ருத !

ஸந்தோஷத்தால் பரவசமான ஸமுத்ரராஜனால் ஆதரிக்கப்பெற்றவரே !

4 छायाकर्षणगुणसिंहिकावदनपाटनपटुतरनखरकरयुगल !

ச2ாயாகர்ஷணகு3ணஸிம்ஹிகாவத3நபா
டநபடுதரநக2ரகரயுக3ல !

நிழலை இழுக்கும் ஸ்வபாவமுள்ள "ஸிம்ஹிகை" என்ற இராக்ஷஸியின் வாயைப் பிளப்பதில் மிகத் திறமை வாய்ந்த கடினமான இரு கைகளையுடையவரே !

श्रितजनातिमृदुल !

ச்1ரிதஜநாதிம்ருது3ல !

தன்னை அண்டிய ஜனங்களிடம் மிகவும் மிருது சுபாவமுள்ளவரே !

5 चापेटघातमात्रनिपातितलङ्काधिदैवत !

சாபேடக4ாத மாத்ரநிபாதித லங்காதி4தை3வத !

கையினால் அடித்தே லங்கைக்கு அதிதேவதையான லங்கிணியை கீழே வீழ்த்தியவரே !

सकलदेवतासेवित !

ஸகலதே3வதாஸேவித !

எல்லா தேவதைகளாலும் ஸேவிக்கப்பட்டவரே !

जनकतनयाजीवनसमुचित दशरथतनय चरितामृतवर्षण 6
घनाघन !

ஜநகதநயாஜீவநஸமுசிதத[3]ச[1]ரத[2]தநய
சரிதாம்ருதவர்ஷணக[4]நாக[4]ந !

ஜநகனது புதல்வியான சீதைக்கு ஜீவனத்தை அளிக்கத் தகுதியான ஸ்ரீராம சரித்திரமாகிற அமிருதத்தை வர்ஷிக்கும் நீருண்டமேகமே !

अनुपधिकृपाघन

அநுபதி[4]க்ருபாக[4]ந !

அவ்யாஜமான கருணை நிறம்பியவரே !

अशोकवनभञ्जन ; निखिललोकरञ्जन ! 7

அசோ[1]கவநப[4]ஞ்ஜந! நிகி[2]லலோகரஞ்ஜந !

அசோகவனத்தை அழித்தவரே ! எல்லா உலகங்களுக்கும் ஆனந்தத்தை அளிப்பவரே !

अक्षकुमारादिशिक्षणदक्ष ! साधुजनसपक्ष ! 8

அக்ஷகுமாரதி[3]சிக்ஷணத[3]க்ஷ !
ஸாது[4]ஜநஸபக்ஷ !

இராவணன் மகனுன அக்ஷய குமாரன், முதலியவர்களை சிக்ஷிப்பதில் திறமை வாய்ந்தவரே ! ஸாது ஜனங்களிடம் மிகப் பிரியமுள்ளவரே !

कलितसाधुवादमेघनाद ! सनकादिसुजनविनुतपाद ! 9

கலிதஸாது[4]வாத[3]மேக[4]நாத[3] ! ஸநகாதி[3]ஸு
ஜநவிநுதபாத[3] !

மேகநாதனுல் (இந்திரஜித்திஞல்) போற்றப்பட்ட போர் புரியும் திறமை பெற்றவரே! ஸநகாதி ஸாதுக்களால் வணங்கப்பட்ட சரணங்களையுடையவரே!

10. **तृणीकृतदशानन ! पदावनतजनावन !**

த்ருணீக்ருதத$^{3}$சாநந! பத$^{3}$ாவநதஜநாவந!

பத்து தலை இராவணனைக் கூட புல்லுக்குச் சமமாகக் கருதியவரே! பாதத்தில் வணங்கிய ஜனங்களைக் காப்பாற்றுகின்றவரே!

11 **वालानलनिर्दग्धलङ्कापुर ! नीलानलस्निग्धशङ्काहर !**

வாலாநலநிர்த$^{3}$க்$^{3}$த$^{4}$லங்காபுர! நீலாநல ஸ்நிக்$^{3}$த$^{4}$சங்கா ஹர!

வாலில் வைத்த தீயினுல் லங்கா நகரத்தை எரித்தவரே! நீலன், அநலன் முதலிய சிநேகிதர்களுக்கு (பலசமயங்களில் பேரில் வெற்றி கிட்டுமா? என்று) உண்டான சந்தேகத்தைப் போக்கடித்தவரே!

12 **चूडामणिसमर्पण संतोषितरराघवसमर्पित परम्भपवित्रित गात्र ! पावितनिजगोत्र !**

சூட$^{3}$ாமணிஸமர்ப்பணஸந்தோஷிதராக$^{4}$வ ஸமர்ப்பிதபரிரம்ப$^{4}$பவித்ரிதக$^{3}$ாத்ர! பாவித நிஜகோத்ர

(சீதையின்) சூடாமணியைக் கொடுத்ததால் ஸந்தோஷமடைந்த ஸ்ரீராமனுல் செய்துகொள்ளப்பட்ட ஆலிங்கனத்தால் மிகவும் புநிதமாக்கப்பட்ட உடலையுடையவரே! தன் வம்சம் முழுவதையும் புநிதமாக்கியவரே!

13 सौमित्रिरक्षणार्थक्षणमात्राहृतौषधिधराधर ! संजीवित सकलवानर !

ஸௌமித்ரி ரக்ஷணார்த்த[2]க்ஷணமாத்ராஹ்ரு
தௌஷதித[4]ராத[4]ர! ஸஞ்ஜிவிதஸகல
வாநர!

இலக்ஷ்மணனை இரக்ஷிப்பதற்காக ஒரு கணப்பொழுதில் ஓஷதிமலையைக் கொண்டுவந்தவரே! எல்லா வாநரர்களையும் பிழைப்பித்தவரே!

14 रविसुतरक्षण ! सुररिपुशिक्षण !

ரவிஸுதரக்ஷண! ஸுரரிபுசி[1]க்ஷண!

சூர்ய ஸுதனை ஸுக்ரீவனை இரக்ஷித்தவரே! தேவர்களுக்கு விரோதியான இராவணன் முதலியவர்களை சிக்ஷித்தவரே!

15 कनकाचलतुलितकाय ! सनकादिवत्कलितमाय !

கநகாசலதுலிதகாய! ஸநகாதி[3]வத்கலிதமாய!

தங்க மலைக்கொப்பான உடலையுடையவரே! ஸநகாதி முனிவர்களைப்போல் மாயையற்றவரே! (மோஹமற்றவரே).

16 कुसुमायुधविकारविदूर ! कुलिशायुधकबलनातिधीर !

குஸுமாயுத[4]விகாரவிதூ[4]ர! குலிச[1]ாயுத
கப[3]லநாதிதீ[4]ர

எப்பொழுதும் எவ்வித மன்மத விகாரமுமற்றவரே! இந்திரனை அல்லது வஜ்ராயுதத்தை விழுங்குவதில் மிக தைரியமுள்ளவரே!

17 विगतदुरित ! विशदचरित !

விக$^{3}$தது$^{3}$ரித ! விச$^{1}$த$^{3}$சரித !

பாவமற்றவரே ! பரிசுத்தமான சரித்திரமுடையவரே !

18 पिशिताशनभयङ्कर ! विनतावनधुरंधर !

பிசி$^{1}$தாச$^{1}$நப$^{4}$யங்கர ! விநதாவநது$^{4}$ரந்தர !

இராக்ஷஸர்களுக்கு பயத்தையளிப்பவரே ! வணங்கியவர்களை இரக்ஷிக்கும் பொறுப்புள்ளவரே !

19 रघुवरचरणपद्मचञ्चरीक ! वदनरुचिविजितपुण्डरीक !

ரகு$^{4}$வரசரணபத்$^{3}$மசஞ்சரீக !
வத$^{3}$நருசிவிஜிதபுண்ட$^{3}$ரீக !

ஸ்ரீராமசந்திரனுடைய சரணமாகிற தாமரையை நாடி நிற்கும் வண்டுபோன்றவரே ! முகசோபையால் தாமரையின் சோபையை வென்றவரே !

20 महात्मन् ! धीमन् ! भगवन् ! हनूमन् ! नमस्ते नमस्ते नमस्ते ॥

மஹாத்மந் ! தீ$^{4}$மந் ! பகவந் ! ஹநூமந்
நமஸ்தே நமஸ்தே நமஸ்தே

ஹே ! மஹாத்மாவே ! ஹே ! புத்திமானே ! ஹே ! பகவானே ! ஹே ! ஹநுமாநே ! தங்களுக்கு நமஸ்காரம்.

---

# ஹிதபாஷிணீ வெளியீடுகள்

எல்லாம் தமிழ் உரையுடன்

1. ஸ்ரீருத்ரம் — சமகம் ... ... ரூ. 2 25
2. விதுரநீதி — யக்ஷப்ரசனம் - பாரத ஸாவித்ரீ ... ... ... ரூ. 1 10
3. ஸப்தர்ஷி ராமாயணம், மற்றும் பல ராமசந்த்ர ஸ்தோத்ரங்கள் ... ... ரூ. 0 70
4. அக்ஷரசகுனம் — தமிழ் ஆங்கில மொழி பெயர்ப்புடன் ... ... ... ரூ. 1 00
5. ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிச்செய்த ஸ்ரீ லக்ஷ்மீந்ருஸிஹ்மஸ்தோத்ரமும், ஷட்பதீ ஸ்தோத்ரமும் ... ... ரூ. 0 50
6. மஹாகவி க்ஷேமேந்திரன் இயற்றிய சாருசர்யா ... ... ... ரூ. 0 90
7. ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிச் செய்த ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி ஸ்தோத்ரம் — "லகுதத்வஸுதா" வ்யாக்யானத்துடன் ரூ. 0 80
8. ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிச்செய்த சிவானந்தலஹரீ ... ... ரூ. 1 40
9. ஸ்துதிகுஸுமமாலா ... ... ரூ. 0 70
10. கேனோபனிஷத் ... ... ரூ. 0 60
11. ஸ்ரீ ஆதிசங்கரர் அருளிச்செய்த சதச்லோகீ ... ... ... ரூ. 1 25

ஒரே சமயத்தில் எல்லாவற்றையும் சேர்த்து வாங்கிக் கொண்டால் ரூ. 10 க்கு கொடுக்கப்படும். தபாற் செலவு தனி.

மானேஜர் :—

ஹிதபாஷிணீ வெளியீடுகள்

1835/3, மேலவீதி, தஞ்சாவூர்.